Regd. No. 2 975.

ஸ்ரீ:

# ஸ்ரீராமாநுஜன் 187.

P. B. ANNANGARACHARYA, KANCHEEPURAM.

ஆசிரியர்: ஸ்ரீகாஞ்சீ. P. B. அண்ணங்கராசாரியர்.

வருடச் சந்தா ரூ. 5 ஜீவியச் சந்தா ரூ. 100.

ஜீவியச் சந்தாதாரர்களுக்கு பத்திரிகை சாச்வதமாக அனுப்பப்பட்டு வருவது தவிர 100 ரூபா விலையுள்ள புஸ்தகங்கள் உடனே அனுப்பப்படும்.

பேரருளாளன் பெருந்தேவித்தாயார் திருவடிகளே சரணம்



ஆழ்வாரெம்பெருமானார் ஜீயர் திருவடிகளே சரணம்.

ஆழ்வார்கள் வாழி அருளிச்செயல் வாழி*
தாழ்வாதுமில்குரவர் தாம்வாழி*—ஏழ்பாரு
முய்யவவர்க ளுரைத்தவைகள் தாம் வாழி*
செய்யமறை தன்னுடனே சேர்ந்து.

குரோதிஞு ஆடிமீ 1964ஞு ஜுலைமீ

# ஸ்ரீ ராமாநுஜன் 187.







சென்னை ஸத்க்ரந்தப்ரகாசன ஸபாமூலமாக மாதந்தோறும் வெளிவரும்பத்திரிகை
ஆசிரியர் : ஸ்ரீ காஞ்சி P. B. அண்ணங்கராசாரியர்.

ஸம்புடம் 16 | 1964ளூ ஜூலைமீ குரோதிளூ ஆடிமீ | ஸஞ்சிகை 7

## திருவாய்மொழி நூற்றந்தாதி—75

மாயன்வடிவழகைக் காணாத வல்விடா
யாய்* அதறவிஞ்சியழுதலற்றும்—*தூயபுகழ்
உற்றசடகோபனை நாமொன்றிநிற்கும் போதுபகல்*
அற்றபொழுதான தெல்லியாம்.

| | | | |
|---|---|---|---|
| மாயன் | ஸர்வேச்வரனுடைய | தூயபுகழ் உற்ற | பரிசுத்த கீர்த்தி வாய்ந்த |
| வடிவு அழகை | { திவ்யமங்கள விக்ரஹ ஸௌந் தரியத்தை | சடகோபனை | ஆழ்வாரை |
| காணாத | { ஸேவிக்கப் பெருமையாலுண் டான | நாம் ஒன்றி நிற் கும் போது | } நாம் கிட்டி நின்று அநுபவிக் கும் காலம் எதுவோ அதுதான் |
| | | பகல் | பகலாகும் ; |
| வல் விடாயாயது | மிக்க வருத்தமானது | அற்றபொழு தானது | } அவ்வநுபவம் விச்சேதித்த காலமானது |
| அற விஞ்சி | மிகவும் அதிகரிக்க (அதனால்) | | |
| அழுது அலற்றும்-அலற்றியழுதவரான | | எல்லி ஆம் | காளராத்ரியாகும். |

கீழே * அங்குமிங்கும் * வார்கடாவருவி * என்னுமிரண்டு திருவாய்மொழிகளாலும் எம்பெருமானுக்கு ரக்ஷைதேடி ஸமாஹிதராய் நின்றார். * வார்கடாவருவியில் "திருச்செய்ய கமலக் கண்ணும் செவ்வாயும் செவ்வடியும் செய்யகையும் திருச்செய்ய கமலவுந்தியும் செய்ய கமலைமார்பும் செய்யவுடையும் திருச்செய்ய முடியுமாரமும் படையும் திகழவென்சிந்தையுளானே" என்று உள்ளம் பூரித்து உடல் பூரித்து அநுஸந்தித்த வடிவழகு திருவுள்ளத்திலே வேரூன்றியிருந்தபடியாலே அவ்வடிவழகைக் கண்ணாரக் கண்டு பாஹ்யஸம்ஸ்லேஷம் பண்ணவேணுமென்று அபேக்ஷை பிறந்து அது பெருமையாலே 'கீழ்ப்பல திருவாய்மொழிகளிலும் பட்ட கிலேசங்களும் இதற்கு ஈடல்ல, ஆழ்வாருடைய கிலேசங்களிலே இது நிகரற்ற கிலேசம்' என்னும்படியாக நொந்து காட்டுத் தீ கதுவினவரைப் போலே தப்தராய், தம்மிற் காட்டிலும் ஆகுலங்களான கரணங்களையுடையராய் 'என்விடாயெல்லாம் தீரும்படி திவ்யாவயவங்களோடே வரவேணும், அழகிய திருவபிஷேகத்தோடே வரவேணும், அழகிய வடிவோடே வரவேணும் ; மேகம் போலே வரவேணும் ; உதய காலத்து ஆதித்யன் போல் பெரிய புகரோடே வரவேணும்' என்றிப்படி கூப்பிட்டு, பின்னையும் அவன் வந்து முகங்காட்டக் காணாமையாலே 'நாம் இந்த கிலேசத்தோடே முடிந்து போமித்தனையன்றோ!' என்று இழவோடே தலைக்கட்டுகிறது *மாயக் கூத்தாவாமனாவென்னுமிப்பதிகம் என்றதாயிற்று. ...

# நல்வார்த்தை நானூறு—நான்காவது சதகம்.

(183-வது ஸஞ்சிகையின் தொடர்ச்சி)

(307 முதல் 326 வரை) இருபது வார்த்தைகளால் காகாசுர விருத்தாந்தத்தில் தோன்றியுள்ள சங்கைகளுக்குப் பரிஹாரமுணர்த்துவோம்.



## காகம் பெற்ற பேறு

307. முமுக்ஷுப்படி த்வயப்ரகரணத்தில் பூர்வ கண்டத்தில் ஸ்ரீமத் பதத்தை விவரித்தருளா நின்ற பிள்ளை லோகாசாரியர், எம்பெருமானை ஆச்ரயிக்குமிடத்தில் பிராட்டி புருஷகாரம் ஆவச்யகமென்பதையும் அது அமோகமென்பதையும் உபபாதித்தருளுகையில் "இவள் ஸந்நிதியாலே காகம் தலைபெற்றது, அதில்லாமையாலே ராவணன் முடிந்தான்" என்கிற சூர்ணையை அருளிச்செய்துள்ளார். விசதவாக் சிகாமணிகளான மணவாள மாமுனிகளின் வியாக்கியானம் இங்கு ;— .... *

"இவள் புருஷகாரத்வத்தின் அவச்யாபேக்ஷிதத்வத்தை யறிவிக்கைக்காக இவள் ஸந்நிதிக்கும் அஸந்நிதிக்குமுண்டான வாசியை யருளிச்செய்கிறார் (இவள் ஸந்நிதியாலே) என்று தொடங்கி."

என்று அவதாரிகையிட்டருளினார். அதற்குமேல் சூர்ணிகையின் பொருளை விவரிப்பது—

"*தேவ்யா காருண்ய ரூபயா * என்கிறபடியே க்ருபைதான் ஒரு வடிவு கொண்டாற்போலேயிருப்பாளாய் ஸ்வதந்த்ரனான ஈச்வரனுக்கும் ஸ்வாதந்த்ரியத்தையமுக்கி க்ருபையைக் கிளப்புமவளான இவள் ஸந்நிதியாலே, அபராதத்தைத் தீரக்கழியச்செய்து ப்ரஹ்மாஸ்த்ரத்துக்கு இலக்காய்த் தலையறுப்புண்ணத்தேடின காகம் *க்ருபயா பர்யபாலயத்* என்கிறபடியே க்ருபாவிஷயமாய்த் தலைபெற்றுப் போய்த்து. அப்படியிருக்கிற இவள் ஸந்நிதியில்லாமையாலே, போக்கற்றுச் செயல்மாண்டு நின்ற நிலை ஒத்திருக்கச் செய்தேயும் காகத்தோபாதி அபராதமுமின்றிக்கேயிருக்க, ராமசரத்துக்கிலக்காய் ராவணன் முடிந்து போனானென்கை." —என்று

308. மேலெடுத்துக் காட்டிய ஸ்ரீ ஸூக்தியில் காகத்துக்கும் ராவணனுக்கும் ஓர் அம்சத்தில் ஸாம்யமும், அபராதத்தில் ராவணனிற் காட்டிலும் காகத்திற்கு ஆதிக்யமும் அருளிச் செய்யப்பட்டிருக்கக் காணாநின்றோம். வாயஸ ராவணர்களுக்கு எந்த அம்சத்தில் ஸாம்யமென்னில், போக்கற்றுச் செயல்மாண்டு நின்ற நிலையில் ஸாம்யம். அதாவது சரணாகதி பண்ணின விஷயத்தில் ஸாம்யம் என்றதாகத் தேறுகிறது. காகத்திற்குப் பிரதிகோடியாக ராவணனையெடுத்திருக்கையாலே காகம் சரணாகதி பண்ணினதுபோல ராவணனும் அது பண்ணியிருந்தாலதான் பொருத்தமாகும். ஆனால் ராவணன் சரணாகதி பண்ணினதாகப் பேச்சு எந்த நூலிலும் கிடையாது. அப்படியிருக்க, காகத்தோடொக்க அவனையெடுப்பது எங்ஙனம்? என்று சங்கை.

309. மணவாளமாமுனிகளின் ஸ்ரீஸூக்தியில்—போக்கற்றுச்செயல்மாண்டு நின்றநிலை ஒத்திருப்பதாகவுள்ளது. "பகவத் ப்ரவ்ருத்திவிரோதி ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்தி: ப்ரபத்தி:" என்றொரு ப்ரபத்தி லக்ஷணமுண்டாகையாலே அவ்விதமான ப்ரபத்திதான் காகத்தின் பக்கலிலே தேறும் ப்ரபத்தி; அது ராவணனிடத்திலும் துல்யம் என்பது இங்கு விவக்ஷிதம். இது மேலே நன்கு விவரிக்கப்படும்.

310. காகத்தின் சரணாகதியை முன்னம் பரிஷ்கரித்துக்கொண்டு பிறகு ராவணனிடத்திற் செல்வோம். "த்ரீந் லோகாந் ஸம்பரிக்ரம்ய தமேவ சரணம் கதঃ" என்று வான்மீகத்திலுள்ளபடியாலும், "சித்திரகூடத்திருப்பச் சிறுகாக்கை முலை தீண்ட, அத்திரமே கொண்டெறிய அனைத்துலகும் திரிந்தோடி, வித்தகனே யிராமா ஓ! நின்னபய மென்றழைப்ப" என்கிற பெரியாழ்வார் திருமொழி ஸ்பஷ்டமாயிருப்பதனாலும், பிள்ளைலோகாசாரியர் தாமே ஸ்ரீவசனபூஷணத்தில் ப்ரபத்தி பண்ணினவர்களைக் காட்டும் சூர்ணையில் தர்மபுத்ராதிகளோடொக்க காகத்தையும் எடுத்திருப்பதனாலும் காகம் சரணாகதி செய்தவர்களின் வகுப்பில் சேர்க்கத்தக்கதாகவே தோன்றும். ஆனால் காகத்தை சரணாகதனென்று சொல்லுவது கௌணமேயல்லது முக்கியமன்று. இதனை ஆளவந்தார் தமது ஸ்தோத்ரரத்னத்தில் "தாத்ருசோ வாயஸஸ்ய ப்ரணத இதி தயாளுঃ" என்ற ச்லோகத்தினால் ஒரு சமத்காரமாகக் காட்டியுள்ளார். "ப்ரணதே வாயஸே தயாளுঃ" என்றருளிச் செய்யாமல் "ப்ரணத இதி தயாளுঃ" என்றருளிச் செய்ததன் உட்கருத்தை ஆசாரியர்கள் எடுத்துக்காட்டியருளுகிறார்கள். காகன் உண்மையில் ப்ரணதனல்லன், பெருமாள் திருவுள்ளத்தாலே ப்ரணதனாகக் கொள்ளப்பட்டானென்பதைச் சொல்வடிவமே நன்கு காட்டுகின்றதன்றே.

311. ஸ்ரீராமாயணத்தில் ஸுந்தரகாண்டத்தில் இந்த விருத்தாந்தத்தைப் பிராட்டி திருவடியிடம் சொல்லும்போது "த்ரீந் லோகாந் ஸம்பரிக்ரம்ய தமேவ சரணம் கதঃ" என்றும் "ஸ தம் நிபதிதம் பூமௌ சரண்யச் சரணாகதம்" என்றும் சொல்லியிருக்கிறாள். இவ்விடத்தில் கோவிந்த ராஜீய வியாக்கியானம் மிக்க தெளிவைத் தருகின்றது. "உபாயே க்ருஹரக்ஷித்ரோச் சப்தச் சரண மித்யயம், வர்த்ததே." என்கிற பகவச் சாஸ்த்ர வசனப்படியும் லௌகிக நிகண்டுகளின்படியும் சரணமென்று க்ருஹத்திற்குப் பெயருள்ளதாதலால் இராமபிரானுடைய இருப்பிடத்திற்கு வந்தானென்கிற பொருளையே ஸ்ரீகோவிந்தராஜர் காட்டியுள்ளார். "சரணம் கதঃ—நிவாஸம் கதঃ; நது உபாயதயா கதঃ" என்பது அவருடைய வியாக்கியான வாக்கியம். காகத்தின் உண்மையான நிலைமையை அந்வய முகத்தாலும் வ்யதிரேக முகத்தாலும் அறுதியிட்டாராயிற்று. ஆகவே காகத்திற்கு சரணாகதியினால் பேறு என்று சிலர் நினைப்பது தகுதியற்றதென்க. "வித்தகனே யிராமாவோ! நின்னபயமென்றழைப்ப" என்கிற பெரியாழ்வார் பாசுரம் தவறுதானோ? அதையடியொற்றிக் கம்பர் "ஐய! நின் சரணஞ் சரணென்றவனஞ்சி வையம் வந்து வணங்கிட" என்று கூறியதும் தவறுதானோ? என்னவேண்டா; திருமங்கையாழ்வார் சிறிய திருமடலில் கஜேந்திராழ்வானுடைய கதையை யருளிச்செய்யுமிடத்து "நாராயணா ஓ! மணிவண்ணா நாகணையாய்! வாராய் என்னாரிடரை நீக்காய்!" என்று களிறு கூவினதாக அருளிச் செய்கிறார். இங்ஙனம் கூவினதாக இதிஹாஸ புராணங்களிலுண்டோவென்று கேட்டால் உண்டு என்ன முடியாதே; இல்லையென்றுதானே சொல்லவேண்டும். பிராமாணிகர்களின் திருவாக்கை நாம் அநாதரிக்கவுங் கூடாது. இந்த காக விருத்தாந்தத்தையே பிராட்டி திருவடிக்கு அடையாளமாகச் சொன்னதாய் வான்மீகத்திலிருக்க, திருவடி பிராட்டிக்குச் சொல்லுமடையாளமாக வைத்துப் பெரியாழ்வாரருளிச் செய்ததைப்பற்றி அவ்விடத்து வியாக்கியானத்தில் மணவாளமாமுனிகள் நிர்வஹித்தருளியிருப்பதைக் காண்க. ஸ்ரீவசனபூஷணத்தில் தர்மபுத்ராதிகளோடொக்கக் காகத்தைப் பரிகணித்திருப்பதும் காகம் சரணாகதி பண்ணினதாகவுள்ளதொரு ப்ரஸித்தியைப் பற்றவாயிற்று. அப்படியுமொரு பக்ஷமிருப்பதை ஸ்தோத்ரபாஷ்யாதிகளில் முன்னோர்கள் காட்டியே யுள்ளார்கள். அதுகிடக்க;

312. இராவணனிற் காட்டிலும் காகத்தின் அபராதம் கொடிது என்று காட்டியருளுகிறார் மணவாள மாமுனிகள். "காகத்தோபாதியபராதமு மின்றிக்கேயிருக்க" என்னும் ஸ்ரீஸூக்தியுள்ளது. அதாவது, இராவணன் வேதவதீசாபபீதியினாலே

# நல்வார்த்தை நானூறு—நான்காவது சதகம்.

(183-வது ஸஞ்சிகையின் தொடர்ச்சி)

(307 முதல் 326 வரை) இருபது வார்த்தைகளால் காகாசுர விருத்தாந்தத்தில் தோன்றியுள்ள சங்கைகளுக்குப் பரிஹாரமுணர்த்துவோம்.



## காகம் பெற்ற பேறு

307. முமுக்ஷுப்படி த்வயப்ரகரணத்தில் பூர்வ கண்டத்தில் ஸ்ரீமத்பதத்தை விவரித்தருளா நின்ற பிள்ளை லோகாசாரியர், எம்பெருமானை ஆச்ரயிக்குமிடத்தில் பிராட்டி புருஷகாரம் ஆவச்யகமென்பதையும் அது அமோகமென்பதையும் உபபாதித்தருளுகையில் " இவள் ஸந்நிதியாலே காகம் தலைபெற்றது, அதில்லாமையாலே ராவணன் முடிந்தான் " என்கிற சூர்ணையை அருளிச்செய்துள்ளார். விசதவாக் சிகாமணிகளான மணவாள மாமுனிகளின் வியாக்கியானம் இங்கு ;— .... *

"இவள் புருஷகாரத்வத்தின் அவச்யாபேக்ஷிதத்வத்தை யறிவிக்கைக்காக இவள் ஸந்நிதிக்கும் அஸந்நிதிக்குமுண்டான வாசியை யருளிச்செய்கிறார் (இவள் ஸந்நிதியாலே) என்று தொடங்கி."

என்று அவதாரிகையிட்டருளினர். அதற்குமேல் சூர்ணிகையின் பொருளை விவரிப்பது—

"*தேவ்யா காருண்ய ரூபயா * என்கிறபடியே க்ருபைதான் ஒரு வடிவு கொண்டாற்போலேயிருப்பாளாய் ஸ்வதந்த்ரனான ஈச்வரனுக்கும் ஸ்வாதந்த்ரியத்தையமுக்கி க்ருபையைக் கிளப்புமவளான இவள் ஸந்நிதியாலே, அபராதத்தைத் தீரக்கழியச்செய்து ப்ரஹ்மாஸ்த்ரத்துக்கு இலக்காய்த் தலையறுப்புண்ணத்தேடின காகம் *க்ருபயா பர்யபாலயத்* என்கிறபடியே க்ருபாவிஷயமாய்த் தலைபெற்றுப் போய்த்து. அப்படியிருக்கிற இவள் ஸந்நிதியில்லாமையாலே, போக்கற்றுச் செயல்மாண்டு நின்றநிலை ஒத்திருக்கச் செய்தேயும் காகத்தோபாதி அபராதமுமின்றிக்கேயிருக்க, ராமசரத்துக்கிலக்காய் ராவணன் முடிந்து போனானென்கை." —என்று

308. மேலெடுத்துக் காட்டிய ஸ்ரீ ஸூக்தியில் காகத்துக்கும் ராவணனுக்கும் ஓர் அம்சத்தில் ஸாம்யமும், அபராதத்தல் ராவணனிற் காட்டிலும் காகத்திற்கு ஆதிக்யமும் அருளிச் செய்யப்பட்டிருக்கக் காணாநின்றோம். வாயஸ ராவணர்களுக்கு எந்த அம்சத்தில் ஸாம்யமென்னில், போக்கற்றுச் செயல்மாண்டு நின்ற நிலையில் ஸாம்யம். அதாவது சரணாகதி பண்ணின விஷயத்தில் ஸாம்யம் என்றதாகத் தேறுகிறது. காகத்திற்குப் பிரதிகோடியாக ராவணனையெடுத்திருக்கையாலே காகம் சரணாகதி பண்ணினதுபோல ராவணனும் அது பண்ணியிருந்தாலதான் பொருத்தமாகும். ஆனால் ராவணன் சரணாகதி பண்ணினதாகப் பேச்சு எந்த நூலிலும் கிடையாது. அப்படியிருக்க, காகத்தோடொக்க அவனையெடுப்பது எங்ஙனம்? என்று சங்கை.

309. மணவாளமாமுனிகளின் ஸ்ரீஸூக்தியில்—போக்கற்றுச்செயல்மாண்டு நின்றநிலை ஒத்திருப்பதாகவுள்ளது. "பகவத் ப்ரவ்ருத்திவிரோதி ஸ்வப்ரவ்ருத்தி நிவ்ருத்திः ப்ரபத்திः" என்றொரு ப்ரபத்தி லக்ஷணமுண்டாகையாலே அவ்விதமான ப்ரபத்திதான் காகத்தின் பக்கலிலே தேறும் ப்ரபத்தி; அது ராவணனிடத்திலும் துல்யம் என்பது இங்கு விவக்ஷிதம். இது மேலே நன்கு விவரிக்கப்படும்.

310. காகத்தின் சரணாகதியை முன்னம் பரிஷ்கரித்துக்கொண்டு பிறகு ராவணனிடத்திற் செல்வோம். "த்ரீந் லோகாந் ஸம்பரிக்ரம்ய தமேவ சரணம் கத:" என்று வான்மீகத்திலுள்ளபடியாலும், "சித்திரகூடத்திருப்பச் சிறுகாக்கை முலை தீண்ட, அத்திரமே கொண்டெறிய அனைத்துலகும் திரிந்தோடி, வித்தகனே யிராமா ஓ! நின்னபய மென்றழைப்ப" என்கிற பெரியாழ்வார் திருமொழி ஸ்பஷ்டமாயிருப்பதனாலும், பிள்ளைலோகாசாரியர் தாமே ஸ்ரீவசனபூஷணத்தில் ப்ரபத்தி பண்ணினவர்களைக் காட்டும் சூர்ணையில் தர்மபுத்ராதிகளோடொக்க காகத்தையும் எடுத்திருப்பதனாலும் காகம் சரணாகதி செய்தவர்களின் வகுப்பில் சேர்க்கத்தக்கதாகவே தோன்றும். ஆனால் காகத்தை சரணாகதனென்று சொல்லுவது கௌணமேயல்லது முக்கியமன்று. இதனை ஆளவந்தார் தமது ஸ்தோத்ரரத்னத்தில் "தாத்ருசோ வாயஸஸ்ய ப்ரணத இதி தயாளு:" என்ற ச்லோகத்தினால் ஒரு சமத்காரமாகக் காட்டியுள்ளார். "ப்ரணதே வாயஸே தயாளு:" என்றருளிச் செய்யாமல் "ப்ரணத இதி தயாளு:" என்றருளிச் செய்ததன் உட்கருத்தை ஆசாரியர்கள் எடுத்துக்காட்டியருளுகிறார்கள். காகன் உண்மையில் ப்ரணதனல்லன், பெருமாள் திருவுள்ளத்தாலே ப்ரணதனாகக் கொள்ளப்பட்டானென்பதைச் சொல்வடிவமே நன்கு காட்டுகின்றதன்றே.

311. ஸ்ரீராமாயணத்தில் ஸுந்தரகாண்டத்தில் இந்த விருத்தாந்தத்தைப் பிராட்டி திருவடியிடம் சொல்லும்போது "த்ரீந் லோகாந் ஸம்பரிக்ரம்ய தமேவ சரணம் கத:" என்றும் "ஸ தம் நிபதிதம் பூமௌ சரண்யச் சரணாகதம்" என்றும் சொல்லியிருக்கிறாள். இவ்விடத்தில் கோவிந்த ராஜீய வியாக்கியானம் மிக்க தெளிவைத் தருகின்றது. "உபாயே க்ருஹரக்ஷித்ரோச் சப்தச் சரணமித்யயம், வர்த்ததே." என்கிற பகவச் சாஸ்த்ர வசனப்படியும் லௌகிக நிகண்டுகளின்படியும் சரணமென்று க்ருஹத்திற்குப் பெயருள்ளதாதலால் இராமபிரானுடைய இருப்பிடத்திற்கு வந்தானென்கிற பொருளையே ஸ்ரீகோவிந்தராஜர் காட்டியுள்ளார். "சரணம் கத:—நிவாஸம் கத:; நது உபாயதயா கத:" என்பது அவருடைய வியாக்கியான வாக்கியம். காகத்தின் உண்மையான நிலைமையை அந்வய முகத்தாலும் வ்யதிரேக முகத்தாலும் அறுதியிட்டாராயிற்று. ஆகவே காகத்திற்கு சரணாகதியினால் பேறு என்று சிலர் நினைப்பது தகுதியற்றதென்க. "வித்தகனே யிராமாவோ! நின்னபய மென்றழைப்ப" என்கிற பெரியாழ்வார் பாசுரம் தவறுதானோ? அதையடியொற்றிக் கம்பர் "ஐய! நின் சரணஞ் சரணென்றவனஞ்சி வையம் வந்து வணங்கிட" என்று கூறியதும் தவறுதானோ? என்னவேண்டா; திருமங்கையாழ்வார் சிறிய திருமடலில் கஜேந்திராழ்வானுடைய கதையை யருளிச்செய்யுமிடத்து "நாராயணா ஓ! மணிவண்ணா நாகணையாய்! வாராய் என்னாரிடரை நீக்காய்!" என்று களிறு கூவினதாக அருளிச் செய்கிறார். இங்ஙனம் கூவினதாக இதிஹாஸ புராணங்களிலுண்டோவென்று கேட்டால் உண்டு என்ன முடியாதே; இல்லையென்றுதானே சொல்லவேண்டும். பிராமாணிகர்களின் திருவாக்கை நாம் அநாதரிக்கவுங் கூடாது. இந்த காக விருத்தாந்தத்தையே பிராட்டி திருவடிக்கு அடையாளமாகச் சொன்னதாய் வான்மீகத்திலிருக்க, திருவடி பிராட்டிக்குச் சொல்லுமடையாளமாக வைத்துப் பெரியாழ்வாரருளிச் செய்ததைப்பற்றி அவ்விடத்து வியாக்கியானத்தில் மணவாளமாமுனிகள் நிர்வஹித்தருளியிருப்பதைக் காண்க. ஸ்ரீவசனபூஷணத்தில் தர்மபுத்ராதிகளோடொக்கக் காகத்தைப் பரிகணித்திருப்பதும் காகம் சரணாகதி பண்ணினதாகவுள்ளதொரு ப்ரஸித்தியைப் பற்றவாயிற்று. அப்படியுமொரு பக்ஷமிருப்பதை ஸ்தோத்ரபாஷ்யாதிகளில் முன்னோர்கள் காட்டியே யுள்ளார்கள். அதுகிடக்க;

312. இராவணனிற் காட்டிலும் காகத்தின் அபராதம் கொடிது என்று காட்டியருளுகிறார் மணவாள மாமுனிகள். "காகத்தோபாதியபராதமுமின்றிக்கேயிருக்க" என்னும் ஸ்ரீஸூக்தியுள்ளது. அதாவது, இராவணன் வேதவதீசாபபீதியினாலே

பிராட்டியைக் கைதொட்டுத் தீண்டினனென்றில்லை காகம் அப்படியன்றிக்கே திருமுலைத்தடத்திலே ரக்தஸ்ராவமாகும்படியாகக் குத்திக்குளம்படுத்துச் செய்த அபராதம் கனத்ததேயாம். இப்படிப்பட்ட காகத்திற்குத் தண்டனை பண்ண வேண்டில் ராவணனுக்கு மேற்பட்ட தண்டனை பண்ணவேண்டும். கொலையில் விஞ்சின தண்டனையில்லையாகையாலே கொலையையாவது செய்திருக்கவேண்டும். அதுவும் செய்யாதே விட்டது பிராட்டியின் ஸந்நிதியாலேயென்பது ஆசாரியர்களின் திருவுள்ளம். பிராட்டியின் திருவாக்கால் "காகுத்ஸ்தः க்ருபயா பர்யபாலயத்" என்றிருக்கையாலே பெருமாள் தம்முடைய கருணையினால் ரக்ஷித்தருளினதாக விளங்குகின்றதேயல்லது வேறு விதமாகக் காணவில்லையேயென்று சிலர் சங்கிக்கலாம். இங்கே ஒரு மருமம் உற்றுநோக்கத் தக்கதுண்டு. பிராட்டி சொல்லுமிடத்து 'அருகேயிருந்த நான்தான் ரக்ஷிக்கச் செய்தேன்' என்று சொல்லுவது அவளுடைய ஸ்வரூபத்திற்குச் சேராது. ஆயினும் மருமமாகச் சொல்லி வைத்தாள்; க்ருபயா என்றது ஆழ்ந்து நோக்கத்தக்கதாம். "அநுக்ரஹமயீம் வந்தே நித்யமஜ்ஞாத நிக்ரஹாம்" என்று போற்றப்படும் பிராட்டி "தேவ்யா காருண்ய ரூபயா" என்று ஸாக்ஷாத் க்ருபையாகவே பகவச்சாஸ்திரத்தில் கூறப்பட்டிருக்கின்றாள். க்ருபை வேறு, பிராட்டி வேறு என்று கிடையாது. ஆக "க்ருபயா பர்யபாலயத்" என்றது க்ருபையின் வடிவமான என்னாலே [என்னுடைய சேஷ்டாவிசேஷத்தினாலே காப்பாற்றினார் காகுத்தர் என்றபடியாம். அல்லாதபோது இங்கு க்ருபயா என்றதானது. பாதபூரணமாத்ரமாய் வியர்த்தமாகும். "காகுத்ஸ்தः பர்யபாலயத்" என்னுமளவே போதுமன்றோ. பெருமாள் தம் குடிப்பிறப்பின் மேன்மையாலே ரக்ஷித்தருளினார் என்பதே பர்யாப்தம். க்ருபையில்லாமல் ரக்ஷிக்க முடியாதாகையாலே "க்ருபயா" என்று சொல்லவேண்டுவதில்லையன்றோ. "வ்யர்த்தம் ஸத் கிஞ்சித் ஜ்ஞாபயதி" என்று வையாகரணர் சொல்லுங் கணக்கிலே வ்யர்த்தமாய்க் கொண்டு தெரிவிப்பதென்னவென்றால் "க்ருபயா—க்ருபாரூபிண்யா ஸீதயா." என்று பொருள் கொள்ளவேணுமென்று தெரிவிக்கின்றது.

313. காகம் தான் செய்த அபராதத்திற்குத் தண்டனையாகக் கண்ணிழந்தபடியால் பிராட்டியின் புருஷகாரம் பலித்ததாகவோ ரக்ஷிக்கப்பட்டதாகவோ கொள்வதற்கில்லையேயென்று சிலருடைய சங்கை. இதற்குச் சொல்லுகிறோம். பிராட்டி தன்வாக்கினால் "பர்யபாலயத்"—ரக்ஷித்தருளினார் என்று சொல்லியிருப்பது ஸ்பஷ்டமாயிருக்க, அவனை ரக்ஷிக்கப்படாதவனாகச் சொல்லுவது ஏலாது. ஸ்ரீவசன பூஷணத்தில் "காகத்துக்கும் காளியனுக்கும் பலன் ப்ராணன்" என்றருளிச் செய்யப்பட்டது. உயிரையே பலனாகக் கொண்டது காகம். அபேக்ஷிதமான வுயிர்க்கு ஹாநிவாராத வரையில் அது ரக்ஷிக்கப்பட்டதாக இசையத் தக்கதேயாகும்.

314. காகம் சரணாகதி செய்யவேணுமென்ற எண்ணத்துடன் விழுந்திருந்தால் எங்கு விழுந்தாலென்ன? எப்படி விழுந்தாலென்ன? என்றொரு வாதமுண்டு. காகத்தின் எண்ணம் நிச்சயிக்க முடியாததாயிரா நின்றது. மேலே தரிப்பற்றுக் கீழே விழுந்ததத்தனை. விழுந்தவதனை சரணாகதியாக்கினவள் பிராட்டி. 'பிராட்டி ஸன்னிதானத்திலும் காகத்திற்குக் கண் போயிற்றென்றால் புருகாரத்தின் மேன்மை என்னவது?' என்று க்ஷேபிக்கலாகாது. கொலை செய்த வொருவன் கொலையுண்ணக் கடமைப்பட்டவனாயினன். 'நமக்குக் கொலை தப்பாது' என்கிற நிச்சயமும் குற்றவாளிக்குத் திடமாக இருந்தது. ஆனால் பிரபலமான சிபார்சு பிடித்தான். அதனால் ஆயிரம் ரூபா அபராதத்தோடு மீண்டான்; அல்லது சில மாதங்கள் சிறைவாஸ தண்டனை விதிக்கப்பெற்றான். உயிர்க்கு அபாயமின்றி மீண்டுவந்த அவன் ஆயிரம் ரூபா அபராதத்தையும் ஸ்வல்ப சிறைவாஸத்தையும் ஒரு தண்டனையாக மதிப்பனோ? சிபார்சு செய்தவர் தாம் தம்முடைய சிபார்சு பழுதுபட்டதாகத்தான் நினைப்.

பரோ? திரக்கழிய அபராதம் பண்ணின காகத்திற்கு அபசார பலன் உலகப் பிரசித்தமாம்படி ஒருகண் தொலையட்டுமென்று பிராட்டியும் திருவுள்ளம் பற்றியிருக்க ப்ராப்தியுண்டு. இதனால் பிராட்டியின் கருணைக்குக் கொத்தை வாராது.

315. உஷையின் தந்தையான பாணஸுரனுக்குப் பரம சிவனுடைய வேண்டுகோளினால், நாலிரண்டு கரங்கள் தப்ப மற்ற கரங்களையெல்லாங் கழித்து உதிரமொழுகச் செய்த நிலைமையிலும் "வாணனுக்கிரங்கினனெம்மாயனே" என்று தயை காட்டினதாக வருளிச்செய்கிறார் திருமழிசைப்பிரான் மாவலியின் சிரத்தின் மீது திருவடியை வைத்து அருள் செய்திருக்கச் செய்தேயும் 'இரக்க மண் கொடுத்தவற்கு இரக்கமொன்றுமின்றியே' என்று இரக்கம் காட்டாததாகவேயருளிச் செய்கிறார் அவ்வாழ்வார்தாமே. ஆகவே இரக்கத்தின் சொரூபத்தையும் இரக்கமின்மையின் சொரூபத்தையும் நிர்ணயிக்க நாம் அதிகாரிகளல்லோம் என்றதாயிற்று.

316. 'பரசுராமனுக்குச் செய்ததுபோல் செய்திருக்கலாகாதா? அவன் கடைசிவரை எதிர்த்தவனுச்சே; அவனுக்குத் தபோபல நஷ்டம் மட்டுந்தானே' என்கிற வாதம் தகுதியற்றது. இத்தகைய கேள்விகள் கேட்பதானால் ஸ்ரீ ராமாயணத்தில் ஒவ்வொரு கதையிலும் கேள்விகள் கேட்க இடமுண்டு. பஞ்சவடியில் சூர்ப்பணகையை அங்கபங்கம் செய்துவிட்டது போலத் தாடகையையும் [கொலை செய்து நீண்ட பழிக்கு ஆளாகாமல்] அங்கபங்கம் செய்து துரத்திவிட்டு முனிவன் வேள்வியை எளிதாகக் காப்பாற்றியிருக்கலாமே என்கிறார் ஒருவர். தாடகையைப் போலே சூர்ப்பணகையையும் "சத்ரு சேஷம் ந சேஷயேத்" என்ற கணக்கிலே கொன்று குழிவெட்டிப் புதைத்திருந்தால் பெருமாள் ஒரு விபத்துமில்லாமல் சுகமாக ஊர் திரும்பிப் போயிருக்கலாமே. பிராட்டியைப் பிரிந்து பட்ட துயரங்களுக்கெல்லாம் மூலகாரணம் சூர்ப்பணகையேயாதலால் அவளை உயிரோடு விட்டது பிசகல்லவா? என்கிறார் மற்றொருவர். இதையெல்லாம் பெருமாளையே நேராக நோக்கி விண்ணப்பஞ் செய்யவேணுமத்தனை.

317. இதற்கெல்லாம் அழகிய சமாதானமுண்டு என்னில், எதற்கும் அழகிய சமாதானமுண்டு. 'திவ்யதம்பதிகளின் திருவுள்ளப்படிதான் கதைகள் நடந்துவந்திருக்கின்றன' என்பதொன்றே அழகிய சமாதானம். கண்ணிழந்ததைக் காகம் ஒரு தண்டனையாகவே நினைப்பிடாமலிருக்க, நாமேதுக்கு அதைப்பற்றி வருந்தவேண்டும். காகமாக வந்த ஜயந்தன் தான் உயிர் தப்பினதற்கு மிகமிக மகிழ்ந்து ஸ்வஸ்தானம் சென்று சேர்ந்து மறுபிறப்புப் பெற்றதாகக் களித்துக் குறைமாடித் திரியா நிற்க, ஒரு பொருளாக எண்ணத்தகாத கண்ணிழவைப் பற்றி நமக்கென்ன விசாரம்?

318. திருவாய்மொழியில் (4—9—2) * சாமாறுங் கெடுமாறும் * என்ற பாட்டின் ஈடு முப்பத்தாறாயிரப்படியில் நம்பிள்ளை ஒரு கதை யருளிச்செய்கிறார்; (அதாவது) ராஜத்ரோஹாபராதம் செய்தவொருவனுக்குக் கைகளையும் கால்களையும் வெட்டிவிடும்படி அரசன் கட்டளையிட அப்படியே வெட்டியாயிற்று உதிர மொழுக வொழுக அவன் வீடுவந்து சேர்ந்திருக்கிறான். உற்றாருறவினர் அவனை விசாரிக்கச் சென்று 'ஐயோ! இப்படியாயிற்றே!' என்று விசனிக்க அதற்கு அவன் 'ஐந்நூறு காசு தா, ஆயிரம் காசுதா. என்னுதே இவ்வளவோடு போனது உங்கள் அநுக்ரஹமன்றோ?' என்றானாம். இப்படி சொன்னவன் இரண்டொரு நாழிகையில் உயிர் துறக்கப்போகிறான். அதை அவன் அறியாதவனல்லன்; ஆனாலும், காசு தொலைவதைக் காட்டிலும் உயிர் தொலைவதை அவன் மேலாக நினைத்தான். லாபநஷ்டங்கள் அவரவர்களின் எண்ணத்தின்படி வெவ்வேறுபட்டிருக்குமன்றே.

319. கடற்கரையில் கடலரசன்மீது தொடுக்கப்பட்ட பாணத்தினுல் அவனுடைய அங்கம் பங்கப்படுத்தப்படவில்லையே என்பது வாஸ்தவம். எம்பெருமான் தான் செய்யும் காரியங்களை இன்னின்னபடிதான் செய்வதென்று ஒரு வியவஸ்தை வைத்துக்கொண்டிருப்பதாகத் தெரியவில்லையே. குஹப்பெருமாள் பக்கலில் மது பர்க்கங்கூட ஸ்வீகரிக்க மாட்டேனென்ற பெருமாள் "சபர்யா பூஜிதஸ் ஸம்யக்" என்னும்படி சபரி செப்பிக்கொடுத்த பழத்தை உகந்து அமுது செய்தருளினர். இதற்கெல்லாம் நாம் காரணம் கண்டுபிடித்துச் சொல்லாமலில்லை. அம்பலத்திலே அவிழ்க்கலாகாதவற்றையும் அவிழ்க்கவேண்டியதாகிறதே யென்று சோகிக்கிறோம். ஸங்கல்ப ஸூர்யோதயத்திலே "பகவதி பரத்வாஜே புக்திஸ் ததா சபரீகரே" என்றருளிய சுலோகத்தை இங்கே நினைப்பது. அதில் நான்காம் பாதம் ரஸகனமானது.

320. 'காகாசுரனுடைய மூக்கு குற்றம் செய்திருக்க, கண்ணைப் பறிப்பானேன்?' என்றொரு கேள்வி. இதுவரையில் ஆசாரியர்களின்மீது தொடுக்கப்பட்ட அம்பு இப்போது பெருமாள் பக்கலிலே பாய்கின்றது போலும். சூர்ப்பணகையின் வாய் குற்றஞ்செய்ததேயல்லது காதும் மூக்கும் ஏதேனும் குற்றம் செய்ததுண்டோ? எதற்கு அந்த அங்கங்களைப் பங்கம் செய்ததென்று கேட்கலாமே. கூரத்தாழ்வான் அதிமாநுஷஸ்தவத்தில் ஸ்ரீராமாவதாரத்திலும் க்ருஷ்ணாவதாரத்திலும் சில கேள்விகள் கேட்டிருக்கிறார் எம்பெருமானையே நோக்கி. இத்தகைய கேள்விகளையும் எம்பெருமானையே நோக்கிக் கேட்கவேண்டுமத்தனை.

321. 'என்றைக்கோ அந்த காகம்செய்த குற்றத்திற்காக எல்லாக்காலங்களிலும் எல்லாத் தேசங்களிலுமுள்ள காகங்களுக்கெல்லாம் அந்த தண்டனையின் பலன் பலிப்பது என்ன நியாயம்?' என்பது ஒரு ஆக்ஷேபம். கம்பராமாயணவுரைகாரர்கள் இதற்குப் பொருத்தமான சமாதானம் கூறியுள்ளார்கள். "ஏக: பாபாநி குருதே பலம் புங்க்தே மஹாஜந:" [ஒருவன் குற்றஞ்செய்ய அதன் பலனைப் பலரும் அநுபவிக்கின்றனர்] என்று சாஸ்த்ரங்கள் கூறுகின்றன. அஃது எல்லாவிடங்களிலும் பலிக்கின்றதென்றில்லை. பலிக்குமிடங்களிலே சாஸ்த்ரங்களை நினைக்கிறோம். திருவாய்மொழியில் "கேசவன் தமர் கீழ் மேலெமரேழெழுபிறப்பும், மாசதிரிதுபெற்று நம்முடை வாழ்வு வாய்க்கின்றவா" என்று இருபத்தொருபடிகால் தமர்கள்மீது எம்பெருமானுடைய அநுக்ரஹம் வெள்ளங்கோத்துப் பெருகுவதாக ஆழ்வாரருளிச்செய்கிறார். இவ்வருட் பெருக்குக்கு எல்லாருமிலக்கோ? எம்பெருமானுடைய அநுக்ரஹத்திற்கும் நிக்ரஹத்திற்கும் ஒரு வியவஸ்தையுண்டோ? சீமாலிகனவனோடு தோழமை கொள்ளுவன்; சாமாறவனையெண்ணிச் சக்கரத்தால் தலைகொள்வன். இத்தனையுஞ் செய்து "ஆமாறு அறியும் பிரானே!" என்று விளிக்கப்படுவன். ஆமாறு அவனறியுமத்தனை போக்கி நாமார் அறிய?

322. 'மாரீசன் மானுருக்கொண்டு வந்து தன்னுயிரையும் மானுடலையுமிழந்தான்; மற்ற மான்கள் இதனுல் தண்டிக்கப்படவில்லையே' என்றதற்குச் சொல்லுகிறோம். மாரீசனை மஹாத்ரோஹியென்று பலர் நினைப்பதுண்டு; அவன் பக்தனேயல்லது த்ரோஹியல்லன். கேண்மின். சூர்ப்பணகை மூக்கறுப்புண்டு, ஜனஸ்தானத்திலிருந்த தன் தமையனுகிய கரன் பக்கல் சென்று இச்செய்தியைச் சொல்லிப் புரண்டழுது அவனுக்குக் கோபத்தை உண்டாக்கினவளவில், அக்கரன் பதினுலாயிர ஸேநாதிபதிகளையும் ஸேனைகளையும் இராமபிரானேடு போர் செய்ய அனுப்ப, இராமன் அவர்களத்தனை பேரையும் தான் ஒருவனுகவே கொன்று வென்றிட்டு பிறகு வந்த கரனையும் கொன்றுவிட்டு ஜனஸ்தானத்தை சூன்யமாக்கினபோது அங்கு இராமபாணத்துக்குத் தப்பிப் பிழைத்து ஒளித்து ஓடிப்போன அகம்பனன் இலங்கைக்குச் சென்று ஜனஸ்தான மடங்கலும் பாழ்பட்ட செய்தியையும், இராமன்

ஒருவராலும் வெல்லமுடியாதவனென்பதையும் சொல்லி 'ஸீதையை அபஹரித்துக் கொண்டு வந்தால், அந்த வருத்தத்தினுல் இராமன் முடிந்துவிடக் கூடும் என்று தெரிவிக்க, இராவணன் அவனது சொற்படியே 'ஸீதையைக் கொள்ளைகொள்ள உபாயமென்? என்று யோசித்து அங்கு நின்றும் புறப்பட்டு மாரீசனிருக்குமிடத்திற்கு வந்து 'நீ எனக்கு ஒருதவி செய்யவேணும்' என்று சொல்லித் தன் கருத்தை வெளியிட, அதுகேட்ட மாரீசன் 'அப்பா இராவணு! அந்த மஹாநுபாவனுடன் உனக்கு த்வேஷம் உதவாது; இந்த இராமன் சிறு பிள்ளையாயிருக்கும் பொழுதே விச்வாமித்ரயாகத்தில் அவருடைய பாணத்துக்கு இலக்காகி நான்பட்டபாடு இனனும் மறக்க முடியவில்லை; அத்திருநாமம் செவிப்படும் போதே என் உடல் நடுங்குகின்றது; இப்பேச்சை விட்டுவிடு; இதை நெஞ்சிலும் நினையாதே' என்று உபதேசிக்க அதைக்கேட்டு இராவணன் இலங்கைக்குப் போய்விட்டான்.

323. பிறகு சூர்ப்பணகை இலங்கைக்குச் சென்று, தான் மூக்கறுப்புண்ட படியையும், தாசரதிகளுடைய ஸௌந்தர்ய பராக்ரமாதி குணங்கள் எல்லையற்றிருக்கிற படியையும், ஸீதையின் இருப்பையுஞ் சொல்லி, 'இராகவனை நீ எவ்விதத்திலாவது பங்கஞ் செய்யாவிடில் நீ ஆண்பிள்ளையே அல்லை' என்று கூறி இராவணனை நிந்தித்துக் கீழே விழுந்து புரண்டு அழ, இராவணன் மறுபடியும் மாரீசனிடத்திற் சென்று, நயபயங்களினுல் அவனைத் தன் சொல்வழிப் படுத்திக்கொண்டு அம்மாரீசனும் தானுமாய்ப் புறப்பட்டு வந்து தான் ஓரிடத்தில் ஒளிந்திருந்தான். மாரீசன் இராவணனுடைய வலிகட்டாயம் பொறுக்கமாட்டாமல் மனம் நொந்துகொண்டே உடன்பட்டு வந்தானேயன்றி இராமபிரானிடத்தில் கறுக்கொண்டு வந்தானில்லை; படுபாவியான இவ்விராவணனுக்குஉடன்பட்டுக் காரியஞ்செய்யாவிடில் இவன் நம்மைக் கொலை செய்துவிடுவதாகச் சொல்லுகிறன். இவனுக்கு உடன்பட்டுக் காரியஞ்செய்தோமாகில இராமபிரான் நம்மைக் கொன்றுவிடப் போகிறுர். இப்பாவியின் கையில் நாம் கொலையுண்பதிற் காட்டிலும் அப்பரம புருஷன் கையிற் கொலையுண்பது நற்கதிகு ஹேதுவாம்' என்றெண்ணித் தன் மரணத்தை நிச்சயித்துக் கொண்டே வந்தானதனை. பிறகு மாரீசன் பொன்மானின் வடிவெடுத்துக் கொண்டு ஸீதையின் பார்வையில் மேயத்தொடங்கி அக்காட்டில் நெடுந்தூரம் இராகவனை இழுத்துக்கொண்டு போய்விட்டான். அப்பொழுது இராகவன் 'இவன அரக்கனே' என்று தெளிந்து அம்புகளை அவன்மீது எறிந்தார். அதனுல் அடியுண்ட மாரீசன் மானுருவை விட்டு நிஜரூபத்துடன் கீழே விழுந்து 'ஹா லக்ஷ்மணு! ஹா ஸீதே! கெட்டேன்' என்று இராகவனைப் போல் கூச்சலிட்டுக் கொண்டு மரணமடைந்தான். இங்கு நாம் ஆலோசிக்கவேண்டிய தென்னவென்ருல், இப்படி இவன் கூச்சலிட்டது இராவணனுக்கு உபகாரம் செய்யவேணுமென்கிற எண்ணத்தினுலா? அலலது அபகாரஞ் செய்யவேணுமென்கிற எண்ணத்தினுலா? என்று ஆராயவேண்டும். 'இராவணன் கையாற்கொலையுண்பதைவிட இராம பாணத்தாற் கொலையுண்டு முடிதல் நன்று' என்கிற எண்ணத்தோடு வந்த மாரீசனுக்கு இராவணன்திறத்தில் உபகாரஞ் செய்யவேணுமென்கிற எண்ணமுண்டாக ப்ரஸக்தியில்லை. 'நாம் மாண்டொழிவது போல் அவனையும் மாண்டொழியச் செய்துவிடவேண்டு'மென்கிற எண்ணங்கொண்டே இராகவனைப் போல் கூச்சலிட்டான். மாரீசன் இப்படிக் கூச்சலிடாமல் வெறுமனே செத்திருப்பானுகில், பிராட்டி லக்ஷ்மணனைப் பிரிய நேர்ந்திராது. இராவணன் பிராட்டியைக் கவர்ந்து கொண்டு போகவும் அது நிமித்தமாகத் தான் மாண்டு போகவும் நேர்ந்திராது. தேவர்களின் பிரார்த்தனை ஈடேறவும் வழியிராது. மரண காலத்தில் மாரீசன் போட்ட கூச்சலே ராவண ஸம்ஹாரத்திற்கு மூலகாரணமாகநின்றமையால் ஸ்ரீராம விஷயத்திலே மாரீசன் உபகாரகனேயன்றி அபகாரகனல்லன் என்பது தத்துவம். ஆக, மனப்பூர்வமாக அபசாரப்பட்ட காகத்தைப் பற்றின பேச்சில் மாரீசனுடைய நினைவு வருதற்கே ப்ரஸக்தியில்லையென்று விடுக்க,

324. ஆக இவ்வளவும் காகத்தின் ரக்ஷணத்தில் தோன்றிய சங்கைகளுக்குப் பரிஹாரம் செய்தற்றது. இந்த சங்காபரிஹாரங்களை ஸ்ரீமந் நிகமாந்தவாசிரியர் ஸ்தோத்ரபாஷ்யத்தில் அறுபத்து மூன்றாம் சுலோகத்தின் வியாக்கியானத்தில் நாலே வரியில் (வடமொழியில்) முடித்துள்ளார். "நநு தக்ஷிணுக்ஷி ஹிம்ஸநேந தண்டயித: கதம் தயாளுத்வம்?=காகத்தின் ஒரு கண்ணைப் போக்கின பெருமாளை [தண்டித்த பிரபுவை] தயாளுவென்பது எங்ஙனம்? என்று பூர்வபக்ஷம். "ப்ராணர்த்திந: காகஸ்ய ப்ராண ரக்ஷணேந ......." இத்யாதிவாக்யத்தால் தத்பரிஹாரம். இது ஸ்பஷ்டம். இதற்குமேல் கண்ணைப் போக்ினதைப் பற்றின சங்கையை மீண்டும் செய்து, "அமோகஸ்ய 'ப்ரஹ்மாஸ்த்ரஸ்ய" என்று தொடங்கி அதற்குக் காட்டின பரிஹாரமாவது—'ப்ரஹ்மாஸ்த்ரப்ரயோகம் அமோகமாதலால் ஏதேனுமொன்றைக் கொண்டு போக வேண்டியிருந்தபடியால் அதற்காக ஒரு கண் கெட்டது; ஆனாலும் ஒரு கருவிழியே வலது புறத்திலும் இடது புறத்திலும் ப்ரஸரிக்கும்படி செய்ததனால் இரு கண்களின் பலனுக்குக் குறையில்லை' என்பதாக. இதற்கு மேலும் அங்கு அருளிச்செய்திருப்பதாவது, துஷ்ப்ரக்ருதியான காகத்திற்கு மறுபடியும் அபராதப்ரவ்ருத்தியுண்டாகாதபடி அச்சம் அநுவர்த்திப்பதற்கான சிக்ஷை நன்றேயென்றார். ஒரு காகம் என்றைக்கோ செய்த அபராதத்திற்கு எக்காலத்திலுமுள்ள எல்லா வாயஸங்களுக்கும் தண்டனையா? என்கிற சங்கையையும் செய்துகொண்டு, "ஸர்வத்ர ஸர்வேஷாம் ப்ரஸ்துதவ்ருத்தாந்த ப்ரக்க்யாபநார்த்தத்வாத்" என்று அதற்குப் பரிஹாரமுமுணர்த்தினர். அபசாரபலனை உலகமறியச் செய்யவேண்டி என்று முடித்தார்.

325. ஆக ஏற்கெனவே ஆசாரியர்கள் சங்கித்துப் பரிஹரித்திருப்பதனால் தொலைந்து போன சங்கைகளை மீண்டும் ப்ரஸங்கிப்பது வேண்டா. "இவள ஸந்நிதியாலே காகம் தலைபெற்றது" என்றருளிச்செய்த ஆசிரியர்களின் திருவுள்ளமும் உபபாதனமும் மிகமிகப் போற்றத்தககது. காகம் மூவுலகும் திரிந்தோடி மீண்டுவந்து விழுந்தபோது அந்த பிராட்டியின் ஸன்னிதானமில்லையாகில் அவனுக்குத் தலை போயிருக்குமென்பதில் ஸந்தேஹமுண்டோ? "தலைக்கு வந்தது தலைப்பாகையோடே போயிற்று" என்கிற வசனத்தை நினைத்தருளியே "காகம் தலைபெற்றது" என்று பிள்ளை லோகாசாரியர் அருளிச்செய்தது. அரசாணிபாலை வேங்கடாத்வரியென்கிற மஹாபண்டிதர் தம்முடைய லக்ஷ்மீஸஹஸ்ர காவ்யத்தில் காருண்ய ஸ்தபகத்தில் (ஸ்லோ. "த்வய்யேவ ஆயததே க்ருபா ரகுபதே: .......அவித: பதந்சரண: காகோ விசோகோஜ்ஜித:" என்கிற சுலோகத்தை "இவள் ஸந்நிதியாலே காகம் தலைபெற்றது" என்ற முமுக்ஷுப்படி ஸ்ரீஸூக்தியையும், கம்பராமாயண வாலிவதைப் படலத்துள்ள "ஆவியைச் சனகன் பெற்றவன்னத்தை அமிழ்தின்வந்த தேவியைப் பிரிந்த பின்னைத் திகைத்தனை போலுஞ்செய்கை" என்ற செய்யுளையும் உயிராக வைத்துப் பாடினர். இந்த சுலோகத்தின் சுருக்கமான கருத்தாவது, பிராட்டியே சக்ரவர்த்தி திருமகனுருடைய கருணை நீரிட்ட வழக்காகும். ஏனென்றால், நீர் கூடியிராத போது அதுவே காரணமாக நிரபராதியான வாலி கொலையுண்டு போனான். அதுவே காரணமாக (முனிவன வேள்வியில்) ஸ்த்ரீவதம் நடந்தது. நீர் கூடியிருந்ததனாலேயே மஹாபராதியான காகம் ரக்ஷை பெற்றது என்பதாம். இவ்விஷயத்தில் இனிமேலும் வரைந்து கொணடு போவது வரஸமாகும்.

326. இனி "அதில்லாமையாலே ராவணன் முடிந்தான்" என்பது பற்றின நுட்பத்தையுணர்த்துவோம் த்வயத்தில் பூர்வகண்டம ப்ரபத்திபரம். ப்ரபத்தி செய்யும்போது பிராட்டி முன்னிலையாகச் செய்யவேணுமென்பது நூற்கொள்கை. காகத்தினிடத்தில் ஏதோ வொருபடி சரணகதி நிரூபிக்கலாயிருந்தது. ராவணன் பக்கலிலும் இங்ஙனே நிரூபிக்கலாயிருந்தாலொழிய இங்கு அவனைச் சேர்த்தெடுக்க நியாயமில்லையே! என்று மேலெழுந்தவாரியாகச சிலர் நினைக்கக் கூடியதுண்டு

இங்கு முன்னம் ஒரு மருமம் கேண்மின். ஸ்ரீராமாயணம் யுத்தகாண்டம் பதினுன்காவது ஸர்க்கத்தில் ராவண ஹிதோபதேசப்ரகரணத்தில் "ப்ரதீயதாம் தாசரதாய மைதிலீ" என்று மூன்றுவிசை சொல்லுகிறுன் விபீஷணுழ்வான். 'பிராட்டியைப் பெருமாளிடம் ஸமர்ப்பித்துவிடு' என்பது இதன் பொருள். இங்ஙனே சொன்ன விபீஷணுழ்வானுடைய உட்கருத்து யாதெனில், இராகவனேடு நாம் யுத்தம் பண்ணுவதாயிருந்தாலுங்கூட ஸீதையைப் பெருமாள் பக்கத்திலே சேரவிட்டு யுத்தம் பண்ணினேமாகில் நமக்கு யாதொரு விபத்தும் விளையாது; அக்காரியத்தை முன்னம் செய்துவிடு; நாம் தலைபெற்றேமாவது திண்ணம் என்பதேயாம். சரணுகதி மரணுகதியென்று எந்த நிர்ப்பந்தமுமின்றிக்கே இருவருமான சேர்த்தியிலே நாம் தலைகாட்டினேமாகில் நமக்கு ஒரு குறையும் வாராது என்பது தத்வவித்துக்களின் திண்ணிய அத்யவஸாயம். "போக்கற்றுச் செயல்மாண்டு நின்றநிலை ஒத்திருக்கச் செய்தேயும்" என்றருளிச் செய்துள்ள மணவாள மாமுனிகள் காகத்திற்குண்டான சரணுகதி ராவணனுக்குமுண்டு, ராவணனுக்குண்டான நிலைதான் காகத்திற்கும் என்று, நெடுநாள் ஆசார்யஸேவை பண்ணித் தெளியவேண்டிய மஹார்த்தத்தை அவலீலையாக வாரியிறைத்துவிட்டார். 'இன்று போய் நாளை வா' என்னும்படியாக * சசால சாபஞ்ச முமோச வீர:" என்ற நிலையொன்று ராவணனுக்கு உண்டானதாக ஸ்ரீராமாயணஜ்ஞர்கள் அறிவார்கள். ஒன்றும் செய்யமாட்டாமல் திகைத்துநின்ற நிலையொன்று உண்டாயிற்றே அப்போது பிராட்டி அருகேயிருந்தாளாகில் அவன் மீண்டும் போர் செய்ய நினைக்கும்படியான நிலைமை ஏற்பட்டிராது. "யதி வா ராவணஸ் ஸ்வயம்" என்று மநோரதித்த பெருமாளுடைய ஆசையும் கைகூடியிருக்கும். இதை யுத்தேசித்தே விபீஷணுழ்வான "ப்ரதீயதாம் தாசரதாய மைதிலீ" என்று மூட்டிக் கொண்டான். அவனெண்ணமும் கைகூடவில்லை. "தேந மைத்ரீ பவது தே" என்ற பிராட்டியின் ஆசையும் நிறைவேறவில்லை. பெருமாளாசையும் நிறைவேறவில்லை.

(தொடரும்)

## ஸ்ரீராமாநுஜனுக்குச் சந்தா செலுத்தியவர்கள்

78. S. R. நாராயணையங்கார் Head clerk K. G. F.
79. K. S. விஜயராகவாசாரியர், காஞ்சீபுரம்.
80. V. N. தேவநாதனவர்கள் 213. கோவிந்தப்ப நாய்க்கன் தெரு, G. T.
81. N. T. ரகுராமகிருஷ்ணன், Madras-2.
82. S. R. Sampath, T. Nagar.
83. K. M. ராமாநுஜய்யங்கார், நாகர் கோயில்.
84. காரியதரிசி, உபய வேதாந்த ப்ரகடந ஸபை, மதுரை.
85. P. S Srinivasachariar Vizag.
86. மாதுஸ்ரீ. விஜயவல்லியம்மாள் சென்னை.
87. N. லக்ஷ்மீநரஸு நாயுடு சென்னை.
88. V. தீனதயாள் நாயுடு Chetput.
89. P. A. Sampath மீனம்பாக்கம்.
90. G. பார்த்தஸாரதி ஐயங்கார் Madras-21.
91. M. V. K. புருஷோத்தமன் Choolai.
92. M. V. ஆழ்வார் முதலியார் & Sons Chintadripet
93. A. கோதண்டராம ராஜா Madras-1.

# PADUKA SAHASRA

OF

# SRI VEDANTA DESIKA

(SELECTIONS)

Edited with Text, Tamil translation and a list of Sri Desika's Works

By

(Rajagopala) RAGHAVACHARI, B.A.

With the help of

Panditha Raja Sri D. T. TATACHARYA SIROMANI, M.O.L.

AND

Prof. M. R. RAJAGOPALA IYENGAR, M.A.

*(Formerly of the Madras Educational Service)*

and

Gomatam Sri S.S. Iyengar

*Published by*

R. NARASIMHAN, B.M.E., MADRAS-5.

[1963]

# ஸ்ரீவைஷ்ணவ ஸமாராதனம் (P. B. A.)

## ஸகல ஸ்ரீவைஷ்ணவர்களும் இந்த வியாஸத்தை முழுதும் வாசித்துப் பலவுண்மைகளை யுணர்வது

ஸ்ரீராமாநுஜனில் 182 முதலாக ஸஞ்சிகைதோறும் ஸம்பாஷணை வியாஸம் வெளிவந்து கொண்டிருக்கிறதே, இதற்கு என்ன விசேஷம்? இது எப்போது முடியும்? என்று டில்லி முதலான நகரங்களிலிருந்து சில பெரிய மனிதர்கள் கேட்டிருக்கிறார்கள். இப்பத்ரிகையின் மூலமாகவே அவர்களுக்கு விடை தெரிவிக்கலாகிறது. எதிர்பேஜில் ஒருடைடல் வெளியிடப்பட்டிருக்கிறதே அதை ஊன்றிப் பாருங்கள்; அதைப்பற்றியே ஸ்ரீராமாநுஜன் 182, 183 ஒன்று சேர்ந்த ஸஞ்சிகையில் பதினொரு பக்க வியாசம் எழுதி வெளியிடப்பட்டிருக்கின்றது. இந்த டைடலில் ஆங்கிலத்தி லிருப்பது என்னவென்றால் [இக்காலத்தில் ஸ்வல்ப ஆங்கிலங்கூட தெரியாதவர்கள் யாரிருக்கிறார்கள்; இதை நான் தமிழில் விவரிக்க வேண்டுமா?] நீங்களே தெரிந்து கொள்ளுங்கள். இதில் S. S. ஐயங்கார் என்கிற ஒருவர் தவிர மற்ற பெரியார்கள் ஒருவரும் ஒரு பாவமுமறியார்கள். D. T தாதாசார்ய சிரோமணி யென்பவரொருவர் S. S. ஐயங்கார் அறிந்ததை நானுமறிவேன் என்று சொல்ல முன்வரக்கூடும். அவரைப்பற்றி ஏற்கெனவே யெழுதி முடிந்துவிட்டது. அதாவது 183 ஸ்ரீராமாநுஜனில் "தற்காலம் வெளிவந்துள்ள சிறுபுத்தகத்தில் [பாதுகாஸஹஸ்ரத் தொகுப்பில்] ஸ்ரீ D T. தாதாசார்ய சிரோமணி ஏதோ உதவிபுரிந்ததாக எழுதப்பட்டிருக்கின்றதல்லவா? அந்த தாதாசாரியர்....... " என்று தொடங்கி வெகு விரிவாக எழுதப்பட்டிருப்பதால் மீண்டும் அதை யநுவதிக்க விரும்புகின்றிலோம். மனிதர்களுக்கு மறதி ஸஹஜமாதலால் மறந்திருந்தால் மீண்டும் அதையெடுத்து வாசிப்பது. மற்றபடி ராஜகோபால ராகவாசாரியர் B A.; M.R. ராஜகோபாலையங்கார், M.A., R. நரஸிம்மன், L.M.E, என்று பிரசுரிக்கப்பட்டுள்ள மஹான்கள் இதில் எவ்வித ஸம்பந்தமுமுடையவர்களல்லர் என்று தெரியவருகிறது. அவர்களுக்கு இதில் ஸம்பந்தமிருக்க ப்ரஸக்தியுமில்லை. டைடலில் S. S. ஐயங்கார் என்கிற பெயர் அச்சில் புகாமல் கையெழுத்தில் மட்டும் விழுந்திருக்கிறது. முழுவதும் இவருடைய சிறு வேலைத்திறம் என்பது நிஸ்ஸந்தேஹமான விஷயம். இவரும் இவரைப்போன்ற மற்றுஞ் சிலரும் பூருவாசாரியர்களை தூஷிப்பதற்குப் பாதுகா ஸஹஸ்ர ப்ரவரலேகனத்தை ஒரு வியாஜமாகக் கொள்பவர்களாதலால் "முன்பு ஒருகாலத்தில் அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் தமது திருத் தமையனாரான பிள்ளை லோகாசாரியர் சொல்லையும் கேளாமல் பொறாமையின் மிகுதியினால்..........."என்று தொடங்கித் தத்தக பித்தக வென்றெழுதிக்கொண்டு போய், " அழகிய மணவாளப் பெருமாள் நயினார் பதகமல ஸஹஸ்ரம் பண்ணுகிறேமென்று சொல்லி முந்நூறு சுலோகம் பண்ணுவதற்குள்ளேயே பொழுது விடிந்தபடியினால் திகைத்துநின்றார், அதோமுகராயிருந்தார்" என்றெழுதி, இதற்குக் கண்டனத்தையும் தானே யெழுதிக்கொள்ள ஆசைப்பட்டு "இதன் தொடர்ச்சியைக் கடைசியில் பார்க்கவும்" என்று துண்டுக் காகிதமொன்றை யொட்டி அந்தக் கடைசி பக்கத்தில் "ஸ்ரீபாதுகாஸஹஸ்ர வ்ருத்தாந்தம் 3ம் பக்கத் தொடர்ச்சி. ஆனாலும் பதகமல ஸஹஸ்ரமென்னும் க்ரந்தம் காணப்படாமையாலும் இது ஸ்வாமி தேசிகனுடைய அநுஸந்தானத்தோடு விரோதிக்கிறபடியாலும் இது உசிதமல்ல..........." என்று எழுதி முடித்திருக்கிறார். 'உசிதமல்ல' என்று தான் (S. S ஐயங்கார்) முடிவுசெய்த ஐதிஹ்யத்தைச் சிலபாமரப்ராந்திக்காக முதலில் அச்சிட்டு "இஃது கோமடம் ஸ்ரீநிவாஸய்யங்கார் ஸ்வாமியின் 'ஸ்ரீதேசிகனும் அவருடைய ஸ்ரீஸூக்திகளும்' என்கிற பிரசுரத்திலிருந்து எடுக்கப்பட்டது" என்றும் வெளியிடப்பட்டுள்ளது. கோமடம் ஸ்ரீநிவாஸய்யங்காரென்பவரும் S. S. ஐயங்கா

ரென்பவரும் வெவ்வேறு நபர்களல்ல; ஒரே நபர்தான். இங்குக் காட்டப்பட்டுள்ள பிரசுரம் பரலோகவாஸியான சேட்லூர் நரஸிம்ஹாசாரியருடைய க்ருதி. அவருடைய ப்ரமப்ரமாத விப்ரலிப்ஸைகளை வெகு விசதமாகக் காட்டி நாம் எழுதி வெளியிட்டிருக்கிற நூல்கள் ஒன்பது. அவை அவருடைய ஜீவிதகாலத்திலேயே வெளிவந்தவை, இற்றைக்கும் மனைதோறும் விளங்குவன. கடைசியாக அவர் நமக்கு மன்னிப்புக் கடிதம் எழுதிக்கொண்டு விச்ராந்தரானார். அந்த க்ஷாமண பத்ரிகையும் அவருடைய ஜீவிதகாலத்திலேயே அச்சிட்டு வெளியிடப்பட்டது. அக கடிதத்தைப் பலர் கண்டபாடம் செய்திருக்கிறார்கள். ஆவச்யகதையைநோக்கி அது இங்கும் அநுவதிக்கப்பட வேண்டியது அவசியமே. நம்முடைய தன்சரிதை ஒவ்வொருவருடைய இல்லத்திலும் விளங்குவதால் அதில் 381, 384 பக்கங்களில் விரிவாகக் கண்டு கொள்வதென்று அதை இங்கு அச்சிடாமல் நிறுத்திக்கொள்ளுகிறோம்.

அந்த சேட்லூர் நரஸிம்ஹாசாரியர் மன்னிப்புக் கடிதமெழுதிக்கொள்ள வேண்டியதற்கான காரணங்கள் ஒன்றிரண்டல்ல; பலபல. அவற்றுள் இரண்டொரு காரணத்தை இங்குத் தெரிவிக்கிறேன். [அவரும் இவரும எவரும் பூர்வாசார்ய தூஷணைகளை யெழுதுவதற்காகவே தேசிகசரித்ர மெழுதுவதாக ஒரு வியாஜமிட்டுக் கிளம்புவது வழக்கமென்பதை யாரும் மறககமாட்டார்களன்றோ.] அவர் தாமெழுதிய தேசிக சரித்திரத்தில் முகவுரையில் எட்டாவது பேஜின் முகப்பில் "நம்முடைய பூருவாசாரியர்களுடைய சரித்தரங்களையும் அவர்களுடைய ஸூக்திகளையும் த்விதீய ப்ரும்மதந்த்ர ஸ்வதந்த்ரஸ்வாமி பன்னீராயிரப்படியில் பூர்வார்த்தத்தில் ஸங்க்ரஹித்தார். இது மிகவும் விஸ்தாரமாயிருந்தபடியினால் இதை ஸங்கரஹித்த த்ருதீயப்ரும்ம தந்த்ரஸ்வதந்த்ரஸ்வாமி மூவாயிரப்படி குருபரமபரையில வெளியிட்டார்" என்றெழுதி அதன் பக்கத்திலேயே "இவையிரண்டும் இப்பொழுது லுப்தங்கள்" என்றெழுதி முடித்திட்டார். பன்னீராயிரப்படியும மூவாயிரப்படியும செததுப்போய் விட்டனவென்று அழுது தீர்த்துவிட்டார். மேலே (பககம 40ல்) ராமாநுஜாபாத்ர தனியன் தோன்றியதை யெழுதி, அதற்கு திவ்யதேசங்களிலெல்லாம் ப்ரசாரமேற்பட வேணுமென்று ஸ்ரீரங்கநாதன நியமித்ததாகச் சில கட்டுக்கதைகளை யெழுதி, அக் கதைகளுக்கு ஆதாரம் காட்டப் புகுந்து இரண்டு அசட்டு ச்லோகங்களைக கவனம் செய்து; "இவ்வர்த்தம் பன்னீராயிரப்படி குருபரம்பரையில் * வர்ஷே தத்பரஸர்வதாரிணி ..........ஸ்ரீசஸ் ஸதா மோததே" என்று ஸஙக்ரஹிக்கப்பட்டிருக்கிறது." என்று தலைக்கட்டிவிட்டார். 'கெட்டிக்காரன் புளுகு எட்டு நாளிலே தெரியும' என்றொரு வசனம். இவருடைய புளுகு அன்றைக்கே தெரிந்துவிட்டது.

இதைப் பற்றி நாம் ஒரு கதை யெழுதியிருந்தோம்; ஒரு தேவஸ்தானத்தில் குதிரையொன்று இருந்தது. கேட்பாரில்லாத கணக்கப்பிள்ளையொருவன் அக் குதிரைக்கு தினப்படி எட்டுபடி கொள்ளும் பத்து சுமை புல்லும் வாஙகினதாகக் கணக்கெழுதி வந்து ஏராளமாக ஸ்வாஹா பண்ணிக் கொண்டிருநதான். ஒரு நாள் அந்தக் குதிரை இறந்துவிட்டது. அது கோவில்குதிரையாகையாலே விசேஷ மரியாதைகளுடன் சரமக்ரியை நடத்தினதாகவும் அதற்காக 207-1-I செலவென்றும் எழுதித் தீர்த்துவிட்டான். பிறகு 10, 20 நாள வரையிலும் குதிரைக்கினிக் கணக்கு ஒன்று மெழுதாமலிருந்து, வருமானத்தை எதற்காக விட்டுவிடவேணுமென்று ஒரு நாள் நினைத்துக் கொண்டு பழையபடியே எட்டுபடி கொள்ளு, பத்து சுமை புல்லு என்று தினப்படியாக எழுதிக்கொண்டிருந்தான். ஒரு சமயம் ஆடிடர் (Auditer) வந்து கணக்கு சோதனை செய்கையில் குதிரையைப் பற்றின கணககுகளையெல்லாம் பரிசீலனை செய்து சிரிக்கிறார், குலுங்கக குலுங்கச் சிரிககிறார். சொல்கிறார் ஆடிடர்—இந்த தேவஸ்தானப் பெருமாளுடைய சகதி அபாரம் போலிருக்கிறது செத்துப்போன குதிரைகூட புல்லும் கொள்ளும் தினமும்படியாயிருக்கிறதே யென்றார். ஆமாஞ்சாமீ! என்கிறான் கணக்குப்பிள்ளை.

என்றைக்கோ செத்துப்போனதாகச் சேட்லூரராலெழுதப்பட்ட பன்னீராயிரப்படி குருபரம்பராப்ரபாவநூல் இவர்க்குப் பல சுலோகங்களையும் பாட்டுக்களையும் காட்டிக் கொடுப்பதானது மேலே காட்டின குதிரைத்தீனிக் கணக்குக்கும் மேற்பட்டதன்றோ. குதிரை செத்துப்போனதையும் நாம் தீனிச் செலவுகள் எழுதி வருவதையும் யார் கவனிக்கப் போகிறாரென்று தேவஸ்தானக் கணக்கன் நினைத்ததுபோல இவரும், பன்னீராயிரப்படி குரு பரம்பரை செத்துப்போனதாக ஏதோவொரு மூலையில் நாமெழுதியிருப்பதையும், அதிலிருந்து ப்ரமாணங்கள் காட்டி வருகிறோமென்பதையும் யார் ஜடிதி பார்க்கப் போகிறாரென்று நினைத்துவிட்டார் அந்தோ! ஸ்ரீமந்நிகமாந்த மஹாகுரவர் என்னைப் பிறப்பித்து இந்த நவீனர்களின் சாயங்களையெல்லாம் கக்கவைக்கத் திருவுள்ளம்பற்றியிருப்பதை இவர்கள் இன்னும்தெரிந்துகொள்ளவில்லையன்றோமோஹஜாட்யத்தினால்; என்றைக்கும் தெரிந்துகொள்ளப் போகிறதில்லை.

இன்னொரு வேடிக்கையும் கேளுங்கள். ஸ்ரீமாந் வேங்கடநாதார்யதனியன் சுக்லஹு சித்திரைமீ புநர்வஸு நக்ஷத்திரத்தில் தநுலக்னம் நாலாவது பாதத்தில் அவதரித்ததாக பக்கம் 35ல எழுதியுள்ளது. [அதாவது] ஸ்வாமிக்கு ஷஷ்டியப்த பூர்த்தியான பிறகு அவதரித்ததாம். ராமாநுஜாபாத்ரம் அதன் பிறகு இருபது வருஷம் கழித்து ஸர்வதாரி வருஷத்தில் மார்கழி மாதத்தில துலாமகரஸம யோகத்தில் கர்க்காடக யோகத்தில கன்யா லக்னத்தில் மேஷ நவாம்சஹோரையில அவதரித்ததாக பக்கம் 48ல் எழுதப்பட்டது. [அதாவது] ஸ்வாமிக்கு எண்பது வயது கடந்த பிறகு ராமாநுஜாபாத்ரம் அவதரித்ததாம். இந்த மாதிரி எங்கே சொல்லப்பட்டிருக்கிற தென்பதைக் காட்டவேண்டியும் (முன்னமே செத்துப்போன) பன்னீராயிரப்படி குரு பரம்பரையே ப்ரமாணமாகக் காட்டப்பட்டிருக்கிறது. ஸ்வாமி திருவவதரித்தது விபவஹுமா? சுக்லஹுமா? என்று முக்கியமானவிதுவே நிர்ணயிக்கப்படாமல் ஊசலாடிக் கொண்டிருக்க, அந்த நிர்ணயத்திற்கு ஒரு ப்ரமாணமும் கிடைக்காமலிருக்க, தனியன் பிறந்தற்கு சகாப்தம் கல்யப்தம் A. D. அப்தம் பரபவாத்யப்தம மீ தேதி, லக்னம் ஹோரை எல்லாம் எழுதப்படுகிறதென்றால் கற்பனையில இவர்கள் கைதேறியிருப்பது எவ்வளவோ ஆச்சரியமல்லவா? என்று நாமெழுதியிருந்தோம். அதற்குச் சேட்லூரர் எழுதியுள்ளார்—"ஸ்வாமியின் திருவவதார வருஷம் விபவாப்தமென்கிற பக்ஷமுமுண்டு, சுக்லாப்தமென்கிற பக்ஷமுமுண்டு. பஞ்சாங்க பேதத்தாலே இப்படி பேதம் ஏற்படுகிறது" இத்யாதி. இப்படிப்பட்ட மஹாஸமர்த்தர்கள் தேசிக தர்சந துரந்தரர்களாம். இத்தகைய அவலக்ஷணங்களையெல்லாம வரிசையாக எடுத்துவிட்டு மானத்தை வாங்கவேண்டாமென்றே மன்னிப்புக் கடிதமெழுதிக் கொண்டார்.

பழைய புராணம் போதும். ஸ்வாசார்யருடைய பெருமைகளை நன்கு தெரிந்து கொண்டு பல வருடங்கள் அழுங்கிக்கிடந்த S. S. ஐயங்கார் மறுபடியும் பூர்வாசார்ய தூஷணத்திலே கைவைத்துப் பாதுகாஸஹஸ்ரதொகுப்பென்று எட்டுக காகிதத்தில் ஒன்று வெளியிட்டு என்றைக்கோ மாண்டொழிந்த வம்புச் சண்டைகளையெல்லாம் கிளப்ப வாரம்பித்தார். பிரபலமான ரஜஸ்தமஸ்ஸுக்களினிடையே சிறிது ஸத்வமும் குடிபுகுந்தது. முதலில் தானெழுதிய [அழகிய மணவாளப் பெருமாள் நாயனார் தூஷணமான] ஐதிஹ்யம் கல்பிதந்தான், தேசிக ஸூக்திவிருத்தந்தான் என்பதை முடிவில் தானே தன கையாலெழுதியச்சிட்டு நின்றார். பதகமலஸஹஸ்ரமென்பது கிடையாதுதான், கற்பனைதான் என்று இந்த S. S. ஐயங்காரெழுதி முடித்தபிறகு இவருடைய ஸஹோதரர் (D. R.) ஸ்ரீரங்கநாத பாதுகா பத்ரிகையைப் புனிதமாக்குவதற்கெழுந்து 300 சுலோகங்களைதாமே செய்யமுடிந்ததென்று பழம்பாட்டையே பாடத்தொடங்கி விட்டார். உண்மையாக ஒரு பண்டிதர் ஓரிரவில் 300 சுலோகங்களெழுதினராகில் அதை அதிமாநுஷகருத்யமென்றுதான சொல்லவேண்டும்.

பெருங்கட்டூர்தாதா என்றொரு கிழவர் இதே நூற்றாண்டிலிருந்தார். மந்த்ர தந்த்ரங்கள் கற்றவர். ஒரு ஊரில் நிற்காமல் எங்கும் சுற்றிக்கொண்டேயிருப்பர். அஸ்மதாசார்யரான ஸ்ரீ ஜகத்குரு காதிஸ்வாமிக்குப் பரமாப்தரிவர். அதனால் இவருடைய பழக்கம் எனக்கு அதிகமாகவுண்டு. இவர் ஓரூரில் இருந்தபோது அவ்வூர்ப் பெண்டுகள் ஏதோ காரணத்தினால் இவரை வெகு லாகவமாகப் பேசிவிட்டார்கள். அவர்கள்மீது கறுக்கொண்டவிவர் அப்பெண்டுகளை மானபங்கம் செய்ய உறுதி கொண்டிருந்தார். ஒருநாள் மாலை இவர் ஆற்றங்கரைக்குப் போய்க்கொண்டிருக்கையில் அப் பெண்டிர் தீர்த்தக்குடங்களை யிடுப்பில்கொண்டு ஆற்றிலிருந்து வந்துகொண்டிருக்கிறார்கள். அப்போது எதிர்ப்பட்ட இப்பெரியாரைப்பற்றி ஏதோ குறும்பாக மொணமொணத்துக்கொண்டு வந்தார்களாம். இதுதான நலல சமயமென்று கொண்ட இப் பெரியவர் வெறுங்கையில் சாம்பல் பொடியை யுண்டாக்கி அதனை அவர்கள்மீது தூவினர். உடனே அப்பெண்டிர்களில் ஒருத்திதப்பாமல் எல்லாருடையவும் சேலைகள் மாயமாய்ப் பறந்து போயின. அந்தோ! என்ன செய்வர்கள் பாவம்! ஒவ்வொருத்தியும் அமணமாகி கல் முள் என்று பாராமல் உடனே தரையிலே உட்கார்ந்துவிட்டார்கள். *கோழி யழைப்பதன் முன்னம் குடைந்து நீராடுவான் போந்த கோபிகளாவது குருந்தமரத்தின்மீது கண்ணனையும் தங்கள் துகில்களையுங் கண்டு *தோழியும் நானும் தொழுதோம் துகிலைப் பணித்தருளாயே * குரக்கரசாவதறிந்தோம் குருந்திடைக் கூறைபணியாய் * என்று ஏத்தி இரந்து துகில்களைப் பெற்றுப் போனார்கள். இவர்கள் யாரை நோக்கி யிரப்பது? யார்கையில் துகிலிருப்பது! இன்னது செய்வதென்று தோன்றாமல் அப்படியே விழுந்துகிடக்கிறார்கள். பிறகு என்னுபிற்றென்பது கிடக்கட்டும். ஊருக்குச்செய்தி சொல்லியனுப்பிச் சேலைகளை வீட்டிலிருந்து வரவழைத்துத் தரித்துச் சென்றிருப்பர்கள்.

அந்த பெருங்கட்டூர்தாதா செய்துவந்த மாயங்கள் இஃதொன்றேயன்று. அபரிமிதம். ஒவ்வோரூரில் ஒவ்வொருவிதமான மாயச்செயல் செய்துவந்தாரென்று ப்ரஸித்தி. அவர் ஸமீப காலத்தில்தான பரமபதித்தார். பத்தெட்டு வருஷமிருக்கு மென்று நினைக்கிறேன். இன்னொரு கதை கேளுங்கள். பெரிய காஞ்சீபுரத்தில் பவழவண்ணர் ஸன்னிதிக்குப் போம் வழியில் யுவாவான ஒரு துலுக்கன். பெரிய சிகித்ஸைகளிலும் மந்த்ர தந்த்ரங்களிலும் பேர்போனவன். காஞ்சியிலுள்ளார் பெரும்பாலும் இவனை யறிவர்கள். 1937ஆம் வருடத்தில் ஒருநாள் நாம் இவனிடம் போகநேர்ந்தது. அப்போதிவன் தன்னுடைய பலவித சக்திகளையும் சொல்லிக் கொண்டான். பரீக்ஷிக்கலாமா? என்றேன். சந்தேகமென்ன? தாராளமாகப் பரீக்ஷியுங்களென்றான். "சுலோகங்களையோ செய்யுள்களையோ எதை வேணுமானாலும் ஒரு காகிதத்தில் எழுதி மடியில் மறைத்து வைத்துக்கொள்ளுங்கள்; அதை நான் அப்படியே எழுதிக் காட்டிவிடுகிறேன்" என்று சொல்லியிருந்தான் அந்த மாந்த்ரிக தாந்திரிகன். இது ஸர்வாத்மநா அஸாத்யமென்று நினைத்த நான் இன்று இவனைப் பொய்யனாக்கிவிட வேணுமென்றெண்ணி ஒரு புல்ஸ்கேப் ஷீட் வாங்கி அதில் மிகக் கடினமான ஸுதர்சநசதக சலோகமொன்றை தேவநாகர லிபியிலும், கருட பஞ்சாசத்திலும் அச்யுதசதகத்திலும் இரண்டு சுலோகங்களை க்ரந்தலிபியிலும், ஒரு பஞ்சாதியைத் தெலுங்கு லிபியிலும், கம்பர் செய்யுளொன்றைத் தமிழ்லிபியிலும், * ஸ ராஜ்யம் குருணா தத்தம்' என்கிற ரகுவம்ச சுலோகத்தை "Sa Rajyam Guruna dattam Prathipadyadhikam babhow Dinanthe Nihitham Thejh Savithreva Huthasanah என்று ஆங்கிலத்திலும்மெழுதிக் காகிதத்தைச் சுருட்டி மடியில் வைத்துக்கொண்டேன். அப்போது அந்த மாந்த்ரிகன் உள்ளே தானிருக்கிறான். சுவாமிகளே! எழுதியாய் விட்டதா? என்று கேட்டான். ஆய்விட்டதென்றேன். உடனே அவன் கவாக்ஷத்வாரத்தாலே அந்தக காகிதத்தை என்னிடம் கொடுத்து 'இது தானா நீங்கள் எழுதியது? பாருங்கள்' என்றான். அதே காகிதம்; அதே

யெழுத்து. சிறிதும் மாறுட்டமில்லை. என்மடியைத் தடவிப்பார்க்கிறேன். மறைத்து வைத்த காகிதம் அப்படியேயிருக்கிறது. எனக்கோ ஆச்சரியம் தாங்கமுடியவில்லை. 'இது எப்படி? எப்படி? என்று அவனைக் கெஞ்சிக் கெஞ்சிக் கேட்கிறேன். இப் படித்தானென்கிறானவன். ஏதோ யக்ஷிணீ தேவதையின் வேலைத்திறம்.

1930ஆம் வருடத்தில் சென்னையில் நடந்த பிரபல விசித்திரமொன்றையுங் கேளுங்கள். வந்தவாசி பக்கத்தில் ஒரு அக்ரஹாரத்து வைஷ்ணவரொருவர் இந்திர ஜாலங்கள் காட்டுவதில் மிகச் சிறந்த வல்லமை பெற்றவர். அவர் ஒருநாள் ஒரு விளம்பரம் வெளியிட்டார்; "இன்று மாலை 4 மணிமுதல் 8 மணிவரையில் கோகலே ஹாலில் மிகப்பெரிய வித்யை யொன்று காட்டப்போகிறேன். டிக்கெட்டு இரண்டே ரூபாய். வருகிறவர்கள் யாவரும் கையில் கடிகாரத்துடன் வரவேண்டும். (அப்போது சென்னையில் மாலை 4 மணிக்கு குண்டு போடுகிற வழக்கமிருந்தபடியால் அதைக் குறிப்பிட்டு) சரியாய் 4 மணிக்கு ஹாலில் வந்து சேர்ந்துவிடவேண்டும். ஒரு மினிட் தப்பி வந்தாலும் உள்ளே பிரவேசம் அனுமதிக்கப்படமாட்டாது" என்று விளம் பரமச்சிட்டு வெளியிட்டார் ஆயிரக்கணக்கானபேர்கள் டிக்கெட்டு வாங்கிக்கொண்டு ஒருவரை யொருவர் நெருக்கிக்கொண்டு ஸரியான மணிக்கு வந்து நின்றுவிட்டார்கள் ஹாலில். அன்று நானும் சென்றிருந்தேன். ஸரியாக 4 மணிக்கு குண்டு போடும் போது ஸூபுப்டு வித்யைக்காரர் வந்து நின்றுவிட்டார். ஸபையோர்களுக்கு கையைக் கூப்பினர், போய்வருகிறேன், போய்வாருங்கள் என்றார். 8 மணி வரையில் வித்யை களை காட்டுவதாக விளம்பரமிட்டு இஃது என்ன ஏமாற்றம் என்று ஜனங்கள் கத்த, கடியாரம் (Watch) கையிலிருக்கின்றதன்றோ, பாருங்கள்' என்றாரவர். ஒவ்வொரு வரும் கடியாரத்தை யெடுத்துப்பார்க்க எல்லாவற்றிலும் முள்ளு எட்டு மணியில் நிற்கி றது. இன்று இவர் காட்ட நினைத்த வித்யை இதுதான் போலும்' என்று நினைத்து எல்லோரும் அதிசயித்தெழுந்து சென்றார்கள். ஸெண்ட்ரல் ஸ்டேஷன் கடியாரங் களிலுங்கூட (சில நிமிஷ காலம்வரையில்) முள்ளு எட்டில் நின்றிருந்ததாக அப்போது சொல்லிக்கொண்டார்கள். S. S. ஐயங்கார், D. R. போல்வார் எழுதுங் கதைகள் இவற்றைவிட அதிசயிக்கத் தக்கவையோ? உண்மையில் இவற்றை ஏகதேசமாக்குகிற கதைகள் ஹிமாலய ப்ராந்தங்களில் பலபல கேள்விப்படுகிறோம். காணவுங் காண்கி றோம். பாம்பாணடி கதையும் கிணறு கட்டுங கதையுமே இவர்களுக்கு அற்புதமாயும் அதிசயமாயும் தோன்றுகின்றன. கண்ட பேர்களோடும் போட்டியிடுவது பெருமை.

பாதுகாஸஹஸ்ரம் ஓரிரவில் செய்யப்பட்ட தென்பாரும், இல்லையில்லை ஒரு யாமத்தில் செய்யப்பட்ட தென்பாருமுளர். ஓரிரவிலோ ஒருயாமத்திலோ ஆயிரத் தெட்டு சுலோகங்கள் எழுதப்படுமானல் ஓரிரவோ ஒரு யாமமோ வேண்டுமாவென்று விவேகிகள சற்று ஆலோசித்துப் பாருங்கள். ஒரே க்ஷணத்தில் பதினயிரம் சுலோ கங்களும் இயற்றப்படுவதற்கு என்ன தடை? சொக்காய்கள் துணிகள முதலியவற் றைக் கையால் தைக்கிறவனேடு போட்டியிடலாம். யந்திரங்களோடு போட்டியிடுவனு ஒரு விவேகி? பாம்பே, கலகட்டா, டில்லி, லண்டன், அமெரிகா, ஆஸ்ட்ரேலியா முத லான விடங்களுக்கு வழி நடந்துசெல்லப் பல வருஷங்களும் பல மாதங்களும் வேண்டி யிருந்தன. இக்காலத்தில் ஒரு நாளில் நாலைந்து தடவை சென்று திரும்புவது உலக மறிந்ததே. அந்த யானங்களோடு மாட்டு வண்டிகளோ குதிரை வண்டிகளோ ஸைகில்களோ மோட்டார் கார்களோ ரயில் வண்டிகளோ போட்டியிட முன்வருவ துண்டா? இதைக்கூட ஆலோசிக்கமாட்டாதவர்களா இந்த 1964ஆம் வருஷத்தில் விளங்கி வருகிறாகள். ஒரு யாமத்தில் ஆயிரத்தெட்டு சுலோகங்கள் சித்ரகவித்வங்க ளோடுங்கூட ஒரு மஹாசார்யர் இயற்றினரென்றால் 'இது ஒரு உபாஸக பலத்தின லன்றி வேறென்றலன்று' என்று அறுதியிட மாட்டாதவர்கள் யாராயிருக்கவேண் டும்? ஆளவந்தார், ஸ்ரீ பாஷ்யகாரர், ஆழ்வான், பட்டர், அம்மாள், அப்புள்ளார்.......

இவர்களால்தான் இது முடியுமோ? அழகிய மணவாளப்பெருமாள் நாயனாராவது மூநூறு சுலோகங்கள் இயற்றியதாகச் சொல்லப்படுகிறாரிவர்களால். ஆளவந்தாராதிகளால் இதில் பாதிகூட இயற்றமுடியாதே. போட்டியிடுவது என்கிற பேதைமைச் செயல் பரமஸத்வநிதிகளான பரமாசாரியர்கள் பக்கலிலே எவ்வளவு ஏறிட்டாலும் ஏறாதென்பது மறக்கத்தக்கதன்று. பாம்பாண்டியோடு போட்டியிட்டார், கிணறு கட்டுகிறவனோடு போட்டியிட்டார், செங்கல் சூளைக்காரனோடு போட்டியிட்டார் என்னும் போட்டியிட்ட பெருமைகளெல்லாம் S. S. ஐயங்காரும் D. R ம் மதிக்கிற பெருமையாளர்களுக்கே Copy right Registered என்றிருக்கட்டும். கீழே நாம் விவரித்துக் காட்டிய மூன்று விநோதக கதைகளையும் பத்தெட்டு வருடங்கள் கழித்து தேசிக சரித்திரத்தில் சேர்த்துப்ரசாரம் செய்யவும் வல்லவர்களிவர்கள் இதையும்பார்ப்பீர்கள்.

"ஸித்தம் ஸத்ஸம்ப்ரதாயே" என்கிற ந்யாஸவிம்சதி ஸ்ரீஸூக்தியில் "ஸத்வஸ்தம் — ஸமயாநியதயா ஸாதுவ்ருத்த்யா ஸமேதம் — டம்பாஸூயாவிமுக்தம்" என்கிற மூன்று விசேஷணங்கள் ஸாரமானவை. உண்மையில் இந்த விசேஷணங்களுக்கு உரியவர்கள் பிறரோடு போட்டியிட மாட்டார்கள், பிறர் போட்டியிட்டு வந்தாலும் அவர்கள் நிறைவிடத்திலும் நில்லார்கள். இங்ஙனன்றிக்கே இதுவே வேலையாக இருந்துவந்தார் எங்கள தேசிகன், எமது தேசிகன், எங்களுடைய தேசிகன் என்று ஒருவர்மாறி யொருவர் எழுதிக்கொண்டு ஸ்ரீரங்கநாத பாதுகாதி பத்ரிகைகளைப் புனிதமாக்கிக்கொண்டு கிடந்தால் கிடக்கட்டுமே. இதற்கு உகப்பது தவிர வேறொன்றுக்கு உகக்கவறியாத மஹாத்மாக்கள் இதையே திருப்பித் திருப்பியெழுதிக்கொண்டும் இதையே படித்துக்கொண்டும் போது போக்கட்டுமே.

தேசிகன் தேசிகன் தேசிகன் தேசிகன் என்பவர்கள் அவரிடத்தில் உண்மையான பக்தி பூண்டவர்களாயிருந்தால் என்ன செய்யவேண்டும் தெரியுமோ? அருமை பெருமை வாய்ந்த அவருடைய திவ்ய ஸ்ரீஸூக்திகளில் உட்புகுந்து முத்தும் மணியும் வயிரமும் நன்பொன்னுமான அர்த்த விசேஷங்களைக் கண்டறிந்து 'இந்த முத்தைக் காணுங்கள், இந்த மாணிக்கத்தை யநுபவியுங்கள், இந்த வைடூரியத்தின் வீறு தன்னை விளக்குகிறோம் கேண்மின், இந்த மரதகப் பச்சையின் மதிப்பை என்னவென்று சொல்லுவது!' என்று பல துறைகளிலும் ஆச்சரியமான அர்த்தங்களையெடுத்து விளக்கித் தாமுமுகந்து தமரையுமுகப்பித்து உலகையும் வாழ்விப்பார்கள். பித்தரும் பேணுத கட்டுக் கதைகளின் பிரசாரத்தையே போது போக்காகக் கொண்டிருக்க வேண்டிய கடமை தேசிகருடைய ஸ்ரீ ஸூக்திகளில் லவலேசமும் அறியகில்லாதவர்களுக்கே உரித்தாம். இந்தக் கட்டுக கதைகளுக்குத் தலைதுலுக்காமை பற்றியும், உடனுக்குடனே வெட்டொன்று துண்டிரண்டென்று கண்டித்தொழிப்பதுபற்றியும் தேசிகத்வேஷியென்றும் தேசிகத்ரோஹியென்றும் திருநாமம் சாத்தப் பெற்ற நாம் காட்டும் தேசிக பக்தி எப்படிப்பட்டது தெரியுமோ? அப்பரமாசாரியருடைய திவ்ய ஸூக்திகளில் ஆழ்ந்து ஆராய்ந்து அரும் பெரும் பொருள்களை வெளியிட்டு ப்ராமாணிக பண்டிதர்களிடம் பரிசு பெறுவதேயாம், இதைத் தன் சரிதையில் பலவிடங்களில் விளக்கி யிருப்பதை உலகம் கண்டிருக்கிறது. இங்கு சிலவிடங்களெடுத்துக் காட்டப்படுகின்றன. (தன் சரிதையில் பக்கம் 2 1 to 230)—

"ஏகயைவ குரோர் த்ருஷ்ட்யா த்வாப்யாம்வாபி லபேதயத். நதத் திஸ்ருபி ரஷ்டாபிஸ் ஸஹஸ்ரேணபி கஸ்யசித்" என்பது தேசிகனுடைய ஸுபாஷிதநீவியிலுள்ளவொரு ச்லோகம். இதற்கு திருச்சி ஏ. வி. கோபாலாசாரியர் ஸ்வாமி அர்த்தம் எழுதி வெளியிட்டார்—ஆசாரியனுடைய உட்கண்ணாகிய ஒருகண்ணாலோ வெளிக்கண்ணுமாகிய இரண்டு கண்களாலோ அடையக் கூடிய பேற்றை சிவனுடைய முக்கண்களாலும், பிரமனுடைய எட்டுக் கண்களாலும், இந்திரனுடைய ஆயிரக்கண்களாலும் அடையமுடியாது—என்று. இதைக் கண்டவுடனே அடியேன் எழுதினேன்—இந்

ரன் ஆயிரங்கண்ணனென்று ப்ரஸித்தியுடையவனுயினும் இவ்விடத்தில் இந்திரனை ஸ்மரிக்க நியாயமில்லை. ப்ரக்ருத ச்லோகத்தில் ஜ்ஞான விகாஸத்தை யுண்டு பண்ணுவது விஷயம். சதுர்முக ப்ரஹ்மா ஸரஸ்வதீ வல்லபனுய் நான்கு வேதங்களையும் கரைகண்டவனுகையாலே ஜ்ஞான விகாஸனத்தில் அவனுக்கு ப்ரஸக்தியுண்டு; பரமசிவன் ஸர்வஜ்ஞனென்று பேர் பெற்றவனுகையாலும், "ஈசாநாத் ஜ்ஞாநமந்விச்சேத்" என்று சொல்லப்பட்டவனுகையாலும், நம்மாழ்வாரும் திருவாய்மொழியில் "நுண்ணுணர்வின் நீலார்கண்டத்தம்மான்" என்று ஞானச்சிறப்பைக் காட்டி அருளிச் செய்திருக்கையாலும் அவனுக்கும் ஜ்ஞாந விகாஸனத்தில் ப்ரஸக்தி உண்டு. இந்த பத்ததியில் இந்திரன் நினைவுக்குவர ப்ரஸக்தியே கிடையாது, மேலும் இங்கே சிவனை முன்னே சொல்லி. அவனிலும் மேம்பட்ட பிரமனை அதற்கடுத்த படியாகச் சொல்லி, இவ்விருவர்களிலும் தண்ணியனுன இந்திரனை அதன்பிறகு சொல்ல ஔசித்யமுமில்லை. ஆகவே, "ஸஹஸ்ரசீர்ஷா புருஷ: ஸஹஸ்ராக்ஷ:" என்று புருஷஸூக்தத்திலும், "தோள்களாயிரத்தாய் முடிகளாயிரத்தாய் துணை மலர்க் கண்களாயிரத்தாய்" என்று திருவாய்மொழியிலும் ஆயிரம் திருக்கண்களையுடையவனுகச் சொல்லப்பட்ட ஸ்ரீமந்நாராயணனே இங்குப் பொருளாகத்தகும். ஆசார்யனுடைய கடாக்ஷத்தாலே உண்டாகும்பேறு திரிமூர்த்திகளின் கடாக்ஷத்தாலுமுண்டாகாது என்று சொல்லுவதே இந்த வக்தாவுக்கு உத்தேச்யமானது; இதுதான் ரஸவத்தரம்—என்பதை வெகு விரிவாக எழுதி வெளியிட்டேன். இதை அந்த கோபாலாசார்ய ஸ்வாமி கடாக்ஷித்து ப்ராமாணிகராகையாலே உள்ளமுருகி "இப்படி உண்மையான அர்த்தம் ப்ரதிவாதிபயங்கர குலதிலகருக்கன்றி வேறு யாருக்கு ஸ்புரிக்கும்?" என்று சொல்லி வைகுண்ட ஏகாதசியன்று ஸ்ரீரங்கம் ஆயிரக்கால் மண்டபத்தருகில் ஆயிரம் பேரெதிரில் அடியேனைத் தழுவிக்கொண்டு ஆனந்தபாஷ்பம் பெருக்கினுர். 'தேசிக பக்தர்களான வித்வான்கள பல பேர்களிருந்தும் ஒருவரும் இதைக் கண்டு பிடித்துத் தெரிவிக்கவில்லையே' என்றும் வருந்தினுர்.

அந்த ஸ்வாமி ஒரு புரட்டாசி மாதத்தில் வெளிவந்த ஆசார்ய ஜயந்தி மலரென்னும் ந்ருஸிம்ஹப்ரியா பத்ரிகையில் "தேசிக காவியங்களின் ஸர்வஜ்ஞத்வம்" என்றொரு வியாஸம் வெளியிட்டார். அதில், ஹம்ஸ ஸந்தேச காவ்யத்திலிருந்து (1—48) "நித்யாவாஸம் வ்ருஷபமசலம் ஸௌந்தராக்யஸ்ய விஷ்ணோ:........... பாதோ திவ்யம் பசுபதி ஜடா ஸ்பர்ச சூந்யம் விபாதி" என்கிற ச்லோகத்தை யுதாஹரித்து இதற்குத் தாதபர்ய மெழுதினுர். திருமாலிருஞ் சோலைமலையில் பெருகும் நூபுரகங்கையானது அழகருடைய திருவடிச் சிலம்புகளிலிருந்து வருகின்ற கங்கையேயானுலும் பகவானுன பசுபதியினுடைய சிரஸ்ஸ்பர்சமாகிற சுத்தியேற்றம் இதற்கில்லையென்று தேசிகன் நூபுரகங்கையினுடைய நிஹீநதையைப் பேசுகிருர் என்று; இவ்விதமான அர்த்தந்தான் (ப்ராசீந) ஸ்ரீ பரகால ஸ்வாமியினுடைய ரஸாஸ்வாதினி யென்கிற வியாக்கியானத்திலு முள்ளதாகவும் எழுதினுர். தேசிகனுடைய ஸூக்திக்கு இதுதான் யதாவஸ்திகமான அர்த்தமென்று இந்த ஸ்வாமி அபிப்ராயப்பட்டது மாத்திரமேயன்றிக்கே ஸ்ரீமதஹோபில மடாதிபதி ஸ்வாமிகளும் மடத்து வித்வான்களும் இதையே பரமார்த்தமாக நினைத்து தங்கள் பத்ரிகையில் இதை ஆதரித்து அச்சிட்டு உலகம் பரவ வெளியிட்டு விட்டார்கள். இதை அடியேன் விமர்சிகக எழுந்து ஆர அமர விமர்சித்து எழுதினதாவது:

*நித்யாவாஸமென்று தொடங்கியுள்ள ஹம்ஸ ஸந்தேச ச்லோகத்தினுல் தூது விடப்படுகிற ஹம்ஸத்தை நோக்கித் திருமாலிருஞ் சோலைபழகரை வழியிடையில் ஸேவிக்குமாறு கூறப்படுகிறது. அங்குப் பெருகுகிற சிலம்பாறென்கிற நூபுர கங்கையானது ஒன்றுன கங்கையிற் காட்டிலும் புனிதமானதென்று கொண்டாடப்படுகிறது. கங்கைக்கு பசுபதி ஜடாஸ்பர்சமாகிற ஒரு குறையுண்டு; நூபுர

கங்கைக்கு அக்குறைதானும் கிடையாதென்று புகழ்ச்சியே இங்குள்ளது. ச்லோ கத்திலிருந்து இப்பொருள் ச்ரமப்பட்டு அறியக்கூடியதன்று; அநாயாஸமாக அறியக்கிடக்கும் பொருள் இதுவே. 'இந்த நூபுர கங்கையானது எம்பெருமா னுடைய திருவடியினின்று பெருகுகின்ற கங்கையேயாயினும் பரமசிவனுடைய சிரஸ்ஸம்பந்தம் பெறுதபடியினுலே சுத்தியோகம் சூந்யமாகப்பெற்றது' என்று ஒரு பெரிய குறையையேற்றி தேசிகன் இந்த ச்லோகம் பணித்திருப்பதாக எழுது வது ஸங்கதமாகாது. எம்பெருமானுடைய ஸ்ரீ பாததீர்த்தமான கங்கைக்கு பசு பதியின் சிரஸ் ஸம்பந்தத்தினுல் சுத்தி ஏற்பட்டதாகவும் அது கங்கைக்கு ஓர் ஏற்ற மாகவும் காட்டி அப்படிப்பட்ட ஏற்றம் நூபுர கங்கைக்கு இல்லையென்று இங்கே குறைகூறப் படுகிறதாகப் பொருள் லிவரிப்பது ஸ்ரீ வைஷ்ணவ ப்ருந்தத்தில் ஒருவ ராலும் ஏற்கத்தக்கதாகாது. தேசிக திவ்யஸூக்திக்கு இது நேர் விபரீதமுமாகும். தேசிகனுடைய தேஹளீச ஸ்துதியில் 12, 13ம் ச்லோகங்களை யநுஸந்தித்தால் இப்பொருள் அஸங்கதமென்று எளிதாக அறுதியிடலாகும். "ஸத்குர்வதாம தவ பதம் சதுராநநத்வம பாதோதகஞ்ச சிரஸாவஹதாம் சிவத்வம்" எனறும், "பாதஸ ரோஜதஸ் தே மந்தாகிநீ விகளிதா மகரந்ததாரா.........புண்யா பபூவ புரசாஸந மௌலிமாலா" என்றும் அந்த க்ரந்தத்திலுள்ளதன்றோ. வரதராஜபஞ்சாசத்திலும் "விமலேந யஸ்ய பாதோதகேந வித்ருதேந சிவா பவந்தி" என்று சமத்கார மாகவும் அருளிச் செய்தார். இவற்றுக்கெல்லாம் சிகரமாக ஸ்தோத்ர பாஷ்யத்தில் "கஸ்ய பாதோதகேந ஸ சிவ:" என்ற விடத்தில் அபார்த்த நிரஸந பூர்வகமாகவும் யதார்த்தமான பொருள் நிலைநாட்டப்பட்டிருக்கிறது. அங்கு முடிவான ஸ்ரீஸூக்தி "அத ஏவ * ஹரஸ்ய காத்ரஸம்ஸ்பர்சாத் பவித்ரத்வமுபாகதா * இத்யத்ராபி ஹரஸ்ய சுத்தி ப்ரதத்வ முபாகதேதி போத்தவ்யம்:" என்றுள்ளது. ஸ்ரீ பரகால ஸ்வாமியின் ரஸாஸ்வாதிநியில் வேறுவிதமாகப் பொருள் செய்யப்பட்டிருப்பதாக எழுதினதும் தவறு. கங்கையிற் காட்டிலும் நூபுர கங்கைக்கு மிகுந்த ஏற்றமுண் டென்பதையே அந்த வ்யாகக்யாதாவும் விரிவாக எழுதியிருக்கிறார்—என்று அடியேன் விபுலநிரூபணம் செய்து எழுதி வெளியிட்ட பின்பு கோபாலாசார்ய ஸ்வாமி பரமானந்தத்துடன் உத்தரபத்ரிகை யெழுதிக் கொண்டார் (அதாவது)— 'ஸ்வாமியினுடைய நிரதிசயப்ரேமா விஷ்காரங்களால் அளவுகடந்த ஆனந்தமடை கிறேன். ஹம்ஸ ஸந்தேச ச்லோகத்தைப்பற்றி அனேக வருஷங்களுக்கு முந்தி ஸேவித்திருந்த ஞாபகங்களைமட்டும் கொண்டு க்ரந்தத்தை இப்போது பார்க்காமல் எழுதியதில தவறுதல் நேர்ந்தது. அதற்கு க்ஷமையை அடியேன் ப்ரார்த்திக்க வேணடியதே" என்று (6—11—52ல்) எழுதிக் கொண்டார். இவ்விஷயம் அம்ருத லஹரி 111லும், ஸ்ரீராமாநுஜன் 47லும் விசதமாகக் காணக்கூடியது.

அதிகரண ஸாராவளியில் ஒரு விஷயம் :

பல வருஷங்களுக்கு முன்பு (அதாவது) மஹர்ஷி வாஸுதேவாசார்ய ஸ்வாமி வேதாந்ததீபிகைக்கு ஆசிரியராயிருந்த காலத்தில் அதிகரணஸாராவளிக்கு ஒரு மணிப்ரவாள வியாக்கியான மெழுதித்தர வேணுமென்றும், அதைத்தாம் வேதாந்த தீபிகையில் வெளியிட்டு ஆனந்திகக்ப் பெறவேணுமென்றும் அடியேனுக்குத் தெரி வித்திருந்தார். அப்படியே அடியேன் எழுதியனுப்பிக் கொண்டிருந்தேன். அது வேதாந்ததீபிகையின் சில ஸஞ்சிகைகளில அச்சாகி வந்தது. [பிறகு சிலருடைய மாச்சரியத்தினுல் அந்த ப்ரகாசநம் நிறுத்தப்பட்டு நின்றது—என்பது நிற்க.]. நாம் அந்த வியாககியான மெழுதுகையில *வ்ருத்திக்ரந்தேது ஜைமிந்யுபரசிதத்யா* (5) என்கிற ச்லோகத்தின் நாலாவது பாதம் *"நிர்வாஹஸ்தூபசாராத் க்வசி திஹ"* என் றிருப்பதில் அநுபபத்தி சங்கை தோன்றிற்று. இஹ என்பது மூன்ருவது பாதத்தி லேயே யிருக்கிறது; அது மறுபடிடம் நான்காவது பாதத்தில் இருக்கச் சிறிதும் அவசியமில்லை. அநாவச்யகத்வம் மாத்திரமேயன்று; அந்வயிக்கவும் மாட்டாது

"இதி கடதே ஹி ஏகதாத்பர்யயோக:" என்று பாடமிருந்தால் நன்கு பொருந்துகிறது. இப்படித்தான் பாடமிருந்திருக்கும்; அச்சுப் பிழையாக இஹ என்று விழுந்திருக்கும்; ஆனாலும் ஸஹஸா நாம் திருத்திவிடத்தகாது; பெரியார்களைக் கேட்போம்—என்றெண்ணிப் பல பெரியார்களிடம் விஜ்ஞாபித்துக் கொண்டேன். இஹ என்பதையடித்து இதி யென்றே திருப்புட்குழி ஸ்வாமி திருக்கையால் திருத்தியிருந்த அச்சுப் புத்தகத்தையும் திருத்தமாகவே எழுதப்பட்டிருந்த ஓலை ஸ்ரீ கோசங்களிரண்டையும் ஸேவிக்க நேர்ந்தது. அப்போது அடியேன்கொண்ட ஆனந்தத்திற்கு அளவில்லை. அதே ஸமயத்தில் திருக்குடந்தையில் ராயம்பேட்டை கிருஷ்ணமாசாரியர் ஸ்வாமி அதிகரணஸாராவளியை (ஸுந்தராசார்ய?) வியாக்கியானத்தோடு சுத்தப் பதிப்பாக அச்சிடுவதாய் ப்ரசுரஞ் செய்து சில பாரங்களை யச்சிட்டு மாதிரிக்காப்பியாக ப்ரகாசனம் செய்திருந்தார். அதில் இந்த *வ்ருத்திக்ரந்தேது ச்லோகமும் அடங்கியிருந்தது. அதிலும் (இஹ கடதே) என்கிற அபத்த பாடமேயிருந்தது. அப்போது அந்த R V. K. ஸ்வாமி எம்மோடு ஸௌஹார்தத்தை விட்டு மாறுபட்டிருந்த ஸமயமாதலால் அவருடைய தவறுகளை எடுத்துக்காட்டிப் பல ப்ரசுரங்களை நாம் செய்த அடைவிலே (இஹ கடதே) என்னுமிந்தத் தவறையும் எடுத்துக்காட்டி இது தவறுதானென்பதை விரிவாக நிரூபித்தும் எழுதிப் பத்திரிகையில் வெளியிடலாயிற்று. அதைக் கடாக்ஷித்த அந்த மஹாமஹோபாத்யாயர் உண்மையில் மஹாவிவேகியாகையால் உள்ளம்பூரித்து 'இப்படிப்பட்ட மஹோபகாரம் வேறு யாரால் செய்யமுடியும்? தேசிகனைத் தாங்குகிற வித்வான்கள் நாங்களே என்று வீணுகக் கொக்கரிக்கின்ற வித்வான்களில் ஒருவர்கூட இந்த ஸூக்ஷ்மமான தவறை எடுத்துக்காட்ட சக்தரல்லர்'......... இத்யாதியாக விரிவாயெழுதி நீண்ட ஸ்ரீ முகமநுக்ரஹித்து, இடையில் ஏறிட்டுக் கொண்டிருந்த மாத்ஸர்யத்தை அறவே விட்டுப் பழைய ஸௌஹார்தத்தை முன்னினும் அதிசயித மாக்கிக்கொண்டார். இது ஜகத்விக்யாதமான விஷயம். அதன் பிறகு நாம் ஸ்ரீ தேசிகக்ரந்தமாலை யச்சிட்டபோது (இதி கடதே) என்கிற ஸாதுபாடத்தையே வெளியிட்டோம். அந்த ஸமயத்தில் ஸ்ரீமதஹோபில மடத்தின் மூலமாக அதிகரணஸாராவளி இரண்டு வியாக்யானங்களோடுகூட வெகு அழகாகப் பதிப்பிக்கப்பட்டு வந்தது. தந்முத்ரண நிர்வாஹகர்களுக்கும் அந்த R V. கிருஷ்ணமாசார்ய ஸ்வாமியே இந்த ஸாதுபாடத்தைத் தெரிவித்து அதிலும் இப்பாடமே வெளிவரும்படி செய்திருக்கிறார் 1939ஆம் வருஷத்தில். இவன் காட்டுகிற பாடத்தையா நாம் ஏற்றுக்கொள்வதென்று அஸூயை கொண்ட வொரு பண்டிதர்....(இஹ கடதே) என்கிற பாடமும் நன்றுதானென்று வாதிக்க 'இஹ கடதே' என்கிற பாடம் ஒரு படியாலும் பொருந்ாது. கீழே *நிர்வாஹஸ்தூபஸாராத் க்வசித்* என்று தனி வாக்யமாக முடிந்திட்டது. அதன்மேல் (இதி) என்றது ஆகவே என்றபடி. இதுதான் இங்கு அவசியமிருக்கவேண்டிய பதம். இஹ என்றால் அசடுதட்டியே தீரும். வியாக்கியானங்களும் இங்குக் கைவிளக்கேற்றிக் காட்டுகின்றன. என்றெழுதி அவரை வாய் மாளப் பண்ணினேம். அவர் இன்னும் ஜீவித்தேயிருக்கிறார். இப்படியாக, சிறியனவும் பெரியனவுமாக ஸ்ரீ தேசிகஸூக்தி மர்மங்கள் பலவற்றை நம்மிடமறிய நிற்கின்ற இவர்கள் மீண்டு மீண்டும் நம்மோடு எதிரம்பு கோக்க வருவதும் க்ஷாமண பத்ரிகையெழுதிக்கொண்டு ஓய்வதுமாக இவையும் ப்ரவாஹதோ நித்யமாம்படி பகவத் ஸங்கல்பம் காண நின்றோம். இந்தப் பாடஸ்காலித்ய விஷயம் ஒரு சிறு அக்ஷரத்தைப் பற்றியதேயானாலும் இதன் அருமையையுணர்ந்த R. V. K. ஸ்வாமி மஹாநிதி பெற்றதாகவே நினைத்து மகிழ்ந்தார்." என்றிவ்வளவும் தன் சரிதையிலுள்ளது.

அதிபால்யவ்ருத்தாந்தமுமொன்று எழுதுகிறேன்.

இதுவும் தன் சரிதையில் பக்கம் 71, 72ல் உள்ளது.

"தோணுங்குளம் ராமாநுஜாசார்யரென்பவர் என்னிளமையில் கிரஸனுயில் வியாபாரத்தில் அளவற்ற செல்வம்படைத்து மஹாதனிகராய் தேவப்பெருமாள்

திருவடிகளில் பரமபக்தராய் அபரிமித கைங்கர்யங்களைச் செய்பவராயிருந்து வந்தார். அவர் சில பல வருஷங்கள் தேவப்பெருமாள் ஸந்நிதிக்கு ரிஸீவராகவும் நீதி மன்றத்தில் நியமிக்கப்பட்டு வேலைபார்த்து வந்தார். அவர்க்கு ஸம்ஸ்க்ருதத்திலோ ஸம்ப்ரதாயத்திலோ அவ்வளவாக ப்ரவேசமிருந்ததில்லை. ஆனாலும் காஞ்சிக்கு வந்த பின்பு பெரியார்களை யடுத்துப் பழகி நல்ல விவேகம் பெற்றார். அவர் வைதிகர்களுக்கும் வித்வான்களுக்கும் ஏதாவது வியாஜத்தையிட்டு ஸன்மானங்கள் செய்து கொண்டேயிருந்தார். ஒருநாள் நூற்றுக்கால் மண்டபத்தில் பண்டிதர்களையெல்லாம் வரவழைத்து ஒரு ஸதஸ்ஸு நடத்தினார். ஸாமான்ய பண்டிதர்களும விசேஷ வித்வான்களுமாகப் பலர் குழுமியிருந்தார்கள். ஒவ்வொருவரும் தேவப்பெருமாளைப்பற்றிப் பத்துநிமிஷம் எதாவது சொல்லவேணுமென்று அவர் கோரியிருந்தார். இடையிடையே அவரும் சில கேள்விகள் ஜிஜ்ஞாஸு முறையில் கேட்பார். அப்படி கேட்டுக்கொண்டு வருகையில், வரதராஜ பஞ்சாசத்தில "த்வத்தேஜஸி த்விரத சைலபதே! விம்ருஷ்டே ச்லோக்யேத லந்தமஸபர்வ ஸஹஸ்ரபாநோ:" என்பதையெடுத்து இதன் தாற்பரியத்தை யாராயினுமொரு வித்வான் விளக்கியுரைக்க வேணுமென்று கோரினார். 'தேவப்பெருமாளே! தேவரீருடைய தேஜஸ்ஸை ஆராய்ந்து பார்த்தால் ஸூர்யனைக் காட்டிலும் அமாவாஸ்யை சிலாகிக்கப்படும்' என்பது அந்த ச்லோகப் பகுதிக்குப் பொருள். இது அநாயாஸமாக யாவரும் சொல்லக்கூடியதே. அமாவாஸ்யைக்கு வந்த ஏற்றமென்ன? ஸூர்யனுக்கு வந்த தாழ்வு என்ன? என்பதை உபபாதிக்கவேணுமே; அதையே அந்த ஸ்வாமி கோரினார். இதில் (ஸஹஸ்ரபாநோ:) என்றதல் பஞ்சமீவிபக்தியா? ஷஷ்டீ விபக்தியா? என்று பலர்க்கு மயக்கம். பஞ்சமியே யொழிய ஷஷ்டியன்று. ஆனால் வியாக்கியானம் செய்தவர்கள் அறுதியிடாதே ஏதோ எழுதியிருக்கிறார்களாம். அதனால்தான் இந்தக் கேள்வி விளைந்தது. வித்வான்கள் சிறிது ஆலோசித்துவிட்டு "இது தேசிக திவ்யஸூக்தி யல்லவா? லேசாகச் சொல்லிவிட முடியுமா?" என்பார் சிலர்; "வியாக்கியானம் பார்த்தால் தெரியும்" என்பார் சிலர்; "வியாக்கியானத்திலும் தலை சுற்றலாயிருக்கிறது" என்பார் சிலர்; இப்படியாகச் சொல்லிக் கொண்டிருந்தார்கள். அடியேன் உத்ஸாஹமாக வெழுந்து தாத்பரியத்தை விளக்கமாக விஜ்ஞாபித்தேன். இதை ஒரு கதை போல் எடுத்துச் சொன்னேன்; (அதாவது) அக்காலத்தில் ஸ்ரீமத் திருப்புட்குழி ஸ்வாமியை எல்லாரும் ஒப்புயர்வற்ற வித்வானகச் சொல்லிக்கொண்டிருப்பார்களாதலால் அந்த ஸ்வாமியைத் தேவப்பெருமாளுடைய தேஜஸ்ஸின் ஸ்தானத்திலே வைத்தேன். ஸ்வல்பசாஸ்த்ரஜ்ஞானம் படைத்தவொரு ஸாதாரண வித்வானை ஸூரியனுடைய ஸ்தானத்திலே வைத்தேன். உண்மையில் ஒரு படிப்புமில்லாதவொரு யதாஜாதனை அமாவாஸ்யையின் ஸ்தானத்திலே வைத்தேன். திருப்புட்குழி ஸ்வாமி சாஸ்த்ரார்த்தம் நடத்தும்போது ஏறக்குறைய அவருக்கு ஸமாநஸ்கந்தரானவொரு ப்ரபலவித்வான் பேசினால ஏற்றிருக்கும்; அரைகுறை படிப்பாளியானவொரு ஸாதாரண வித்வான் தன்னை பரபல பண்டிதராக நினைத்துச் செருக்குற்றிருந்தபடியாலே தாம் ஏதோ ப்ரதிவாதம் செய்வதாக எழுந்தார்; அதனாலென்னாகும்? நாலு வார்த்தையிலேயே பங்கமடைந்து நின்றார். ஒரு படிப்புமில்லாத யதாஜாதர் ஒருவருளரே; அவரும் அந்த ஸதஸ்ஸிலே யிருந்தார்; அவர் உள்ளபடி தம்மை அஜ்ஞராகவே நினைத்திருப்பவராதலால் தாம் ஒன்றும் வாய் திறக்கவில்லை; அதனால் பங்கமடைய ப்ரஸக்தியே யில்லையாயிற்று. இடையில் ஒருவர் பங்கமடைந்தாரே, அவர் ஸ்வல்பம் கல்வி கற்றிருந்தபடியாலல்லவோ வாயைத் திறக்க நேர்ந்து அதனால் பங்கமடைய ப்ராப்தமாயிற்று. அவர் நினைத்தார் 'ஐயோ நாம் சிறிது கல்விகற்றபடியாலன்றோ இப்படி பங்கமடைய நேர்ந்தது; இந்த யதாஜாதனைப் போலே நாமும் நிரக்ஷரகுக்ஷியாயிருந்து விட்டால் இந்த பங்கம் நமக்கு நேர்ந்திராதே' என்று நினைத்தார். இதுபோல, தேவப்பெருமாளுடைய தேஜஸ்ஸின் முன்னிலையிலே பங்கமடைந்த ஸூர்யன், அவ்விதமாக பங்கமடைய ப்ரஸக்தியற்ற

அமாவாஸ்யையைக் கொண்டாடி 'நாம் அமாவாஸ்யையாகப் பிறவாமற் போனோமே!' என்று அநுதபிக்க நேர்ந்தது. இதுவே இந்த தேசிகனுடைய திருவுள்ளம். இந்த வர்ணனையினால், ஸூர்ய தேஜஸ்ஸை ஸர்வாத்மநா பங்கப்படுத்தவல்லது தேவப் பெருமாளுடைய தேஜஸ்ஸு என்பது தேறி நிற்கும். இதனை சமத்காரமாக ஸாதித்திருக்கிறபடி—என்று விரிவாக வுபந்யஸித்தேன். இதைக்கேட்ட ஸதஸ்யர்கள் யாவர்க்கும், விசேஷித்துக் கேள்விகேட்ட அந்த தோணுங்குளம் ராமாநுஜாசார்ய ஸ்வாமிக்கும் பரமானந்தமுண்டாயிற்று. அப்போது ஒருவர்க்கும் அஸூயை தலை காட்டினதாகத் தெரியவில்லை.'' பிறகுதான் க்ரமேண அஸூயை ஜனித்து வளர்ந்தது. மேன்மேலும் வளர்ந்துகொண்டும் வருகிறது.

இவற்றுக்கெல்லாம் சிகரமாக ஒரு மஹார்த்தத்தைக் காட்டிவிட்டு நிற்கிறேன். யதிராஜஸப்ததியில * யதாபூதஸ்வார்த்தா * என்கிற சுலோகத்தில் ஸ்ரீபாஷ்யகார ஸூக்திக்கு த்ரிவேதீநிர்வேத ப்ரசமநவிநோத ப்ரணயிநீ என்று விசேஷணம் கொடுக்கப்பட்டுள்ளது. யதிராஜஸப்ததிக்குப் பல வ்யாக்கியானங்கள் தருக்குடந்தையில் அச்சேறி இருக்கின்றனவே; எடுத்துப்பாருங்கள். த்ரிவேதி என்பதற்கு ருக்யஜுஸ் ஸாமங்களாகிற மூன்று வேதங்கள் என்று பொருளெழுதி, அந்த வேதத்ரயத்தின் நிர்வேதத்தை அவலீலயாகப் போக்கினது ஸ்ரீபாஷ்யகார ஸூக்தியென்று எழுதியுள்ளார்கள். ருக்யஜுஸ்ஸாம வேதங்களுக்கு என்ன சோகமிருந்தது? அதை பாஷ்யகார ஸ்ரீஸூக்தி எங்ஙனே போக்கிற்று? என்று கேட்டால் வாய்திறக்க வழியில்லை. ஸ்வாமியின் திருவுள்ளத்தின் ஒரு மூலையிலும் உறையுமதன்று இவ்வர்த்தம். நாம் சொல்வதும் பல வித்வான்கள் உகந்ததுமான அர்த்தம் இதுவன்று. பேதச்ருதி, அபேதச்ருதி, கடகச்ருதி என்று மூவகைப்பட்ட ச்ருதிகளையே த்ரிவேதியென்கிறார் ஸ்வாமி. இவற்றுக்கு என்ன நிர்வேதமென்னில, பேதச்ருதியை அத்வைதிகள் அநாதரித்தபடியாலே அதனால் அதற்கு நிர்வேதம்; அபேதச்ருதியை த்வைதிகள் கைவிட்டபடியாலே அதனால் அதற்கு நிர்வேதம். கடகச்ருதியை இரு வகுப்பினரும் அநாதரித்தமையால் அதனால் அதற்கு நிர்வேதம். இவற்றுள் ஒரு ச்ருதியையும் கைவிடாமல் அநாதரியாமல் ச்ருதித்ரய ஸாமரஸ்யேந நிர்வஹித்தருளினவர் ஸ்ரீபாஷ்யகாரரொருவரேயாதலால் இதையிட்டு அவருடைய திருவாக்கை த்ரிவேதீ நிர்வேத ப்ரசமநியாகவருளிச் செய்தாராயிற்று. ஸங்கல்ப ஸூர்யோதயத்தில் ''மிதோ பேதம் கத்வைஷவபிலபதி பேத ச்ருதிரஸோ'' என்றுள்ள சுலோகத்தை நன்கறிந்தவர்களுக்குத்தான் இவ்வர்த்தம் புத்தியிலேறும். இவ்வர்த்தத்தை இஞ்சிமேட்டழகியசிங்கர் ஸந்நிதியில் ஒரு ஸமயம் விஜ்ஞாபித்தேன்; ஸ்வாமி உண்மையில் பரம வித்வத்ரஸிகராகையாலே கண்ணீர்ப் பெருக்குடன் ஸாதித்தருளின வார்த்தை—''இதற்கு நான் என் சொல்வேன்? தேவரீராகப் பிறந்தால்தான் இத்தகைய அர்த்தங்கள் ஸ்புரிக்கும் என்றிவ்வளவே சொல்லமுடியும்' என்று. ஸ்ரீமத் திருக்குடந்தை யாண்டவன் இவ்வர்த்தத்தைத் தம் திருவுள்ளத்தில் குறிக்கொண்டிருந்து நேற்றைப் பங்குனி வித்வத்ஸதஸ்ஸில ''இப்படியன்றோ தேவரீர் ஸாதித்த வர்த்தம்'' என்று ஸாதித்தருளினதையும் நினைப்பூட்டி நிற்கிறேன். இதெல்லாம் செருக்கினால் எழுதுவதல்ல; ஸ்வாமியின் ஸ்ரீஸூக்திகளில ஆழ்ந்து அர்த்த விசேஷங்களை யநுபவிக்க நான் பிறந்தேன்; ஹேயமான சில கட்டுக்கதைகளைக் கற்பனை செய்துகொண்டு அவற்றைத் திரும்பத் திரும்ப எழுதிக்கொண்டு போதுபோக்க நீங்கள் பிறந்திருக்கிறீர்கள் என்று யதார்த்தமான இவ்விஷயத்தை வெளியிடாமலிருப்பது எங்ஙனேயோ? இந்த வியாஜத்திலும் உங்களுக்கு எத்தனை அர்த்த விசேஷங்கள் கிடைத்துவிட்டன பாருங்கள். இங்ஙனே கிடைத்துக்கொண்டேயிருக்கும்.

D. R. என்பவர் ஆங்கிலத்தில் தேசிகதர்சனம் என்றொரு வியாசமெழுதி Peep's into Mysticism என்கிற புத்தகத்தில் விசிஷ்டாத்வைத ப்ரசாரிணி ஸபை

யாரால் வெளியிடுவித்தாராம். அகற்குத் தமிழ் மொழிபெயர்ப்பும் பொருத்தமான விடையளிப்பும் சென்றவருஷத்தில் ஒரு பெரியார்மூலமாக வெளிவந்தது. அவை பல தத்துவங்களை யுணர்த்துகின்றன. (அந்த மொழி பெயர்ப்பும் விடையளிப்பும் இங்கு லோகோபகாரார்த்தமாக வெளியிடப் பெறுகின்றது.)

# "தேசிக தர்சனம்" (D. R.)

விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்துக்கு ஆதிகாலத்திலேயே டங்கர், த்ரமிடர் குஹதேவர், போதாயனர் முதலானோர்களால் பாஷ்யங்களாலும் வ்ருத்திகளாலும் நல்லமுறையில் அடிகோலப்பட்டது. ஆளவந்தார் இந்தக் கடகாலை வைத்து தம்முடைய ஸித்தித்ரயத்தில் தரைமட்டமளவு கட்டிடம் எழுப்பினர். ஸ்ரீராமாநுஜர் இந்தக் கட்டிடத்தை வகையாகக் கட்டிமுடித்தார். ஆனல் இந்தக் கட்டிடத்திற்கு மதிள் சுவர், பயன்படக்கூடிய புறவீடுகள் முதலியன கட்டி அழகுபடுத்தி, தமது கவித ஸாமர்த்தியத்தாலும், தர்க்கநைபுண்யத்தாலும் ஒளிதிகழும்படி செய்தவர் தேசிகரே ஆவர். ஸ்ரீபாஷ்யத்தில் செய்யப்பட்ட ஸித்தாந்தம் அதிகரணஸாராவளியிலும் தத்வடீகையிலும் பேசப்பட்டுத் தெளிவடைந்தன. இந்த ஸித்தாந்தத்துக்கு ந்யாய மீமாம்ஸை இவைகள் தேசிகனல் சேர்க்கப்பட்டன. தத்வமுக்தாகலாபத்திலும் அதன் வியாகயானத்திலும் இந்த ஸித்தாந்தத்தின் உண்மைகள் தெளிவுபடுத்தப் பட்டன. பாஞ்சராத்ரரக்ஷையால் ராமாநுஜருக்கு ப்ரியமான பாஞ்சராத்திரத்தின் பெருமை பேசப்பட்டது. தாமே அருளிய இவைகளோடு த்ருப்தி படாமல் ஸ்வாமி க்ரந்த வியாக்யானங்களும் அருளிச்செய்தார். ஈசாவாஸ்யம், ஸ்தோத்ரரத்னம் சதுச்ச்லோகீ, கத்யத்ரயம் இவைகளுக்கு பாஷ்யங்களியற்றியதுமன்றி கீதாபாஷ்யத்துக்கு மிக விரிவான தாத்பாய சந்த்ரிகையும் அருளினர். மேலும், ஸச்சரித்ரரக்ஷ, சததூஷணி, தம் ரஹஸ்யங்கள் இவைகளால் விசிஷ்டாத்வைதத்தின் தூய்மை பெருமைகள் காக்கப்பட்டன. தேசிகருடைய ராமாநுஜ பக்தி—விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்தைத் தெளிவாகவும், ஆழ்ந்தும் கற்று அறிந்தமையாலும், ராமாநுஜரிடம் உள்ள ஒப்பற்ற பக்தி, கௌரவ புத்தி இவைகளே தேசிக ஸ்ரீஸூக்திகளுக்கு மூலகாரணம். பகவானுக்கு அடுத்தபடி இவர் ராமாநுஜர் ஒருவரிடமே ப்ராவண்யம் உள்ளவர். அமுதனர் ஈச்வரன் தமக்கு ராமாநுஜர் மூலம் அருள்புரியட்டும் என்றார். இவரோ ராமாநுஜர் தொழும் தெய்வம் என்ற காரணத்தால்தான் நான் எம்பெருமானைத் தொழுகிறேன் என்கிறார். பகவான், பெரியபிராட்டி இவர்கள் உள்பட எல்லா ஆசார்யர்களுமே ராமாநுஜருடைய பாதகிரீடயோः ஸம்பந்தத்தால் வீறுபெறுமவர்களே, தம் ஆன்மீகப் பெருமை, உலகறிந்த க்யாதி இவைகளும் தம் எதிராஜபக்தியால் வந்தவையேயென்று எதிராஜ ஸப்ததியில் பறைசாற்றுகிறார். இவருடைய ஸாக்ஷாத் ஆசார்யருக்கும் ராமாநுஜர் என்றே பெயர். ராமாநுஜருடைய அந்தரங்க சிஷ்யரான கிடாம்பி ஆச்சானுடைய கொள்பேரனர் தம் ஆசார்யராய் வந்ததுபற்றி பகவானுக்கு நன்றி செலுத்துகிறார். திவ்ய தம்பதிகள்—ராமாநுஜ ஸித்தாந்தததுக்கு தேசிகர்பண்ணிய மகச் சிறந்தபணி (1) திவ்ய தம்பதிகளே தத்வம் ஹிதம் புருஷார்த்தம் என்ற கொள்கையை ஸ்தாபித்தது (2) ஸம்ஸ்க்ருத வேதாந்தத்தையும் த்ரமிடோபநிஷத்தையும் ஒருங்கச் செய்தது. ராமாநுஜர் கட்டிய மாளிகையில் தேசிகர் இரு விவாஹங்கள நடத்திவைத்தார். ஒன்று பகவானுக்கும் பிராட்டிக்கும்; மற்றது ஸம்ஸ்க்ருதத்திற்கும் தமிழுக்கும்; முதல் விவாஹம் ப்ரமேயங்களுக்கு. இரண்டாமது ப்ரமாணங்களுக்கு. தம் பூர்வரான விசுவாமித்திரர் ஸீதைக்கும் ராமனுக்கும் விவாஹம் செய்வித்ததுபோல் இவர் தம் க்ரந்தங்களில் நாராயணனையும் ஸ்ரீதேவியையும் சேர்த்து ஒரு மிதுனமாக்கினர். இவர்களே திவ்ய தம்பதி, சரண்ய தமபதி, சேஷி தம்பதி எனப்படுவர். இதனல தனியான எயபெ

மாணையோ தனியான பிராட்டியையோ பரதத்வமாக நோக்காமல் இவர்களின் நித்ய யோகத்தை பரததவமாக ஸாதித்தார். (உபய வேதாந்தம்) அப்படியே ப்ரமாணங் களுக்குள்ளும், தேசிகனே முதன் முதலாக ஸம்ஸ்க்ருத வேதங்களையும் தமிழ் வேதங் களையும் நாடறிய ஒன்றுபடுத்தினர். இந்த விவாஹம் ராமாநுஜரால் நிச்சயிக்கப்பட் டிருந்தும், நாடறிய கோலாஹலத்துடன் நடத்தியவர் தேசிகனே. ராமாநுஜர் உப நிஷத்திலும் ஸூத்ரத்திலும் சரீர சரீரி பாவமே பேசப்பட்டது என்பதை நிரூபிப்ப தையே தம் முக்ய குறிக்கோளாகக் கொண்டமையால் அநேக முக்ய விஷயங்களையும், த்ரமிடோபநிஷத்தைப் போல பலப்ரமாணங்களையும் தொடவே அவகாசமில்லாமல் போய்விட்டது. தன்னை மிஞ்சிய உபயவேதாந்த ஆசார்யர் இல்லையென்று சொல்லக் கூடிய பேர்படைத்த பராசர பட்டரும் உபய வேதாந்தம் என்ற ஒரு கோட்பாட்டை வரையறுக்கவில்லை. தேசிகருக்கு ஸ்ரீரங்கத்திலிருந்து அழைப்புவர காஞ்சீபுரத்தி லிருந்து சென்று ஸம்ஸ்க்ருத ப்ரமாணங்களுக்கு ஒத்த பெருமை தமிழ் ப்ரபந்தங் களுக்குமுண்டு என்பதை நிலைநாட்டினர். இது இவருடைய அபார வாக் சாதுர்யத் தாலும் ஸர்வஜ்ஞர் என்னும்படியான வித்வத்தாலும் ஸாத்யமாயிற்று. இவை த்ரமிடோபநிஷத ஸாரத்திலும் ரத்னவளியிலும் காணலாம். இந்த தொண்டுக்காக ரங்கநாதனல் இவருக்கு உபயவேதாந்தாசார்யர் என்னும் பிருது அளிக்கப்பட்டது. உபயவேதாந்த ஸிததாந்தத்தை தாம் ஆரம்பித்து வைத்ததாக தேசிகன் கர்வப்பட வில்லை. இது நாதமுனிகளால் தொடங்கப்பட்டு ஆளவந்தாரால் வளர்க்கப்பட்டு ராமாநுஜரால ரக்ஷிக்கப்பட்டது என்கிறர். இருப்பினும் பல தலைமுறைகளான ஸ்ரீ வைஷ்ணவர்கள் இவருக்கே கடமைப்பட்டவராவர். இவருடைய தொண்டு இல்லா விடில் ஸம்ஸ்க்ருத பண்பாடாகிய நதியும் தமிழ் பண்பாடாகிய நதியும் தனித்தனியே ஓடிக்கொண்டிருக்கும். தனித்தனியே ஸ்னனம் செய்யலாம். ஆனல் இவைகளின் சேர்த்தியாகிற இன்பம் கிட்டாது. தேசிகருடைய ஸரஸ்வதி (பாஷாஸாமர்த்யம்) அந்தர்வாஹினியாக ஓடி உபநிஷத்தாகிற கங்கை, ப்ரபந்தங்களாகிற யமுனை இவை களுடன் சேர்ந்து ஒரு த்ரிவேணி ஸங்கமமாக ஆயிற்று. இந்த த்ரிவேணியில் தீர்த்த மாடி நம் தாபம் பாபம் இவை போக்கிக்கொள்ள முடிவது நம் பாக்யம்.''

(இதற்கு விடையளிப்பு வருமாறு) ஆளவந்தாரென்றும் பாஷ்யகாரரென்றும் பட்டரெனறும் தேசிகரென்றும் சில ஆசிரியர்களைக் குறிப்பிட்டு, இன்னர் பௌண் டேஷன் போட்டார். இன்னர் கடகால் தூற்றூர், இன்னர் தரைமட்டமாக்கினர், இன்னர் சுவரெழுப்பினர், இன்னர் மேல்தளம் போட்டார் என்று ஏதேதோ எழுது கிறரே, இதற்கெல்லாம் இவர் உண்மையில் அதிகாரியா? ஆளவந்தாருடைய ஸித்தித்ரயம் முதலானவை பெரிய வித்வான்களுக்கே கோசரியாதவை. மற்றும் இவர் தொடுகிற ஸ்ரீபாஷ்ய ச்ருதப்ரகாசிகா சததூஷணீ தத்வமுக்தா கலாபாதிகளை இவர் மோந்துபார்க்கவும் அதிகாரியல்லரென்பதை நாம் சொல்லவேணுமோ? "எப்படி ஊரா மிலைககக் குருட்டா மிலைக்குமென்னும்'' என்று ஆழ்வார் ஸாதித்தது போல யாரும் அந்த க்ரந்தங்களைப் புகழலாகாதோவென்னில், ஏன் புகழலாகாது? நன்ருகப் புகழலாம். தாராளமாகப் புகழலாம். தேசிகர் திருவாய்மொழிக்கு நிகமபரிமலம் என்றெரு மிகப் பெரிய வியாக்கியானமிட்டதாக வொரு கல்பனை செய்ததோடு நிற்காமல் அதில் ஆருயிரப்படிக்குப் பின் தோன்றிய எல்லாப் படிகளையும் நசுக்கிப் பொசுக்கி நொறுக்கித் தள்ளிவிட்டதாகவெழுதி அதை நித்யமும் நீரிண்டு செய்து இவர் தாமே அழகுபார்த்துக் கொள்ளுகிற அழகு அற்புதமன்றே. அந்த நிகம பரிமலத்தைப்பற்றி கீழே மொழி பெயர்த்து உதாஹரித்த வியாஸத்தில் ஏனே பேச வில்லை? அந்த நிகமபரிமலத்தில் ஆருயிரப்படியையுங்கூட நசுக்கி நொறுக்கித் தள்ளி விட்டதாக இவர் ஏன் கனுக்கண்டிலரோ தெரியவில்லை? ஆருயிரப்படியோடு மற்ற படிகளோடு வாசியற எலலாம் ஒரே படிதானே யிவர்க்கு. தம் மதத்திற்கு இது ஸாதகம், இது பாதகம் என்கிற பகுத்துணர்வு இவர்க்கும் இவரைச் சேர்ந்தவர்கட்கும்

எள்ளளவேனுமிருக்குமாகில் தேசிகரை பூஷிக்கவும் மற்றையாசாரியர்களை தூஷிக் கவும் ப்ரஸக்தியுண்டாகாதன்றோ தேசிகரை எம்பெருமானார்க்கு மேலாகமட்டு மன்றிக்கே எம்பெருமானுக்கும் மேலாக வைத்து எழுதினாலும் ஸ்ரீ வைஷ்ணவ ரென்று பேர்பெற்றவர்—உண்மையான ஸ்ரீ வைஷ்ணவர் பொறுமைப்படமாட்டார். பொறுமைப்படுவதற்கு விஷயமென்ன இருக்கிறது. தேசிகருக்கு யாரால் எதில் என்ன குறை சொல்லமுடியும். அவருடைய நிஜஸ்வரூபத்தைத் தெரிந்துகொள்ளாமல் அவரோடு உறவு பிடித்துக்கொண்டதுமன்றிக்கே லோகக்ஷேபத்தையும் விளைத்து வருகிறார்களே! என்பதுதான் சோசநீயம். தேசிக சரித்திரத்தில் எழுதியிருக்கிறு ரிவர்—பிராட்டிஸ்வரூபத்தையும் ப்ரபத்திஸ்வரூபத்தையும் தாறுமாறாக்கின வகுப் பினரைக் களைந்தொழிக்கவே தேசிகனவதாரம் என்று. இவ்விரண்டு விஷயங் களிலும் தாறுமாறாக எழுதின வகுப்பினர் யார்? தேசிகன் களைந்தொழித்த விதம் யாது? இதை இரண்டே பக்கத்தில் எழுதி உலகுக்கு வெளிச்சம் காட்டலாமே. அதற்கு வழி இல்லையே. பாடின பாட்டையே பாடிக்கொண்டிருப்பர்.

இவர் தேசிகதரிசனமென்கிற மகுடம் வைத்ததே மிகுப் பிசகு. கூரேசத ரிசனம், பட்டார்ய தர்சனம், லோகார்ய தர்சனம் என்றிப்படி வழங்குவது யுக்தமானால் இதுவும் யுக்தமாகலாம். ஆசார்ய வாசகமான தேசிக சப்தம் பகவத் ராமாநுஜா யரைத்தான் குறிக்கிறது என்பரேல் ஒருவாறு உய்யவிரகுண்டு. ஆனால் அப்படி சொல்ல இவர் முன்வர முடியாது; முன்வரவும் மாட்டார். ஏதோ வீணான அபிமானத்தை வைத்து இவர் செய்வது செய்க. கடகாலில்லாத சுவர் எவ்வளவு உயரம் எழும்புமென்று பார்ப்போம். "விசிஷ்டாத்வைத ஸித்தாந்தத்துக்கு ஆதி காலத்திலேயே டங்கர், த்ரமிடர், குஹதேவர் போதாயனர் முதலானோர்களால் பாஷ் யங்களாலும் வ்ருத்திகளாலும் நல்லமுறையில் அடிகோலப்பட்டது" என்று ஆரம்பிக் கிறார். இங்கே ஊன்றிக் கேளுங்கள். ஆங்காங்கு இண்டெக்ஸ் பண்டிதர்களென் சிலரைச் சொல்லுவதுண்டு. சில பெரிய புத்தகங்களில் உள் விஷயங்களுக்கு அட்ட வணை யிடுவதுண்டே; அதற்குத்தான் இண்டெக்ஸ் என்று பெயர். புத்தகத் துள்ளே கண்ணைச் செலுத்தாமல் அந்த அட்டவணையை மட்டும் மனனம் செய்து விட்டு ப்ரஸங்கங்கள் செயவார்கள். அதைக்கொண்டு 'இவர்கள் பஹு க்ரந்தங்களை கண்ட பாடம் செய்தவர்கள்' என்று அறிஞர்களும் பேசிவிடுவார்கள்.

பாம்பே நிர்ணய ஸாகர பிரஸ், காசீ சௌகம்பா, பூனா ஆனந்தாச்ரம முதலான விடங்களில் பல அபூர்வமான க்ரந்தங்கள் பதிப்பித்து அவற்றுக் விரிவான கியாடலாகும் வெளியிட்டிருக்கிறார்களன்றோ அதில் கவிகளின் பெய களும் நூல்களின் பெயர்களும் இருப்பதைச் சிந்தனை செய்துவிட்டு, 'அந்த வித்வா அந்த க்ரந்தம் எழுதியிருக்கிறார், இந்த பண்டிதர் இந்த நூல் இயற்றியிருக்கிறார் என்று ப்ரஸங்கிப்பது; அத்தோடும் நில்லாமல் "கதாதரபட்டாசாருடைய பாண்டி யம் பட்டோஜிதீக்ஷிதருக்கு வருமோ? முராரியின் பாணியே தனிப்பட்டது; பா கவியின் சொல்நயம் வெகு அழகு" என்றிப்படி, ஏதோவொரு ஊரி அச்வமேதம் நடத்துகின்றார்களாமே அந்த விதமாகவும், அற்கும் மிகமிக மேலா வும ஸ்வஸஜாதீயர்களிடத்திலே பேசி மயக்கப் பார்ப்பதுண்டு. அதேபோல் இவ டங்கர் த்ரமிடர் குஹதேவர் போதாயநர் என்று சில வ்யக்திகளையும், பாஷ்ய வ்ருத்தி என்று சில க்ரந்தங்களையும் பேசக் கற்றுவிட்டது ஆச்சரியம். அல்ல ஆச்சரியமன்று. இப்போது நமக்குக் கிடைக்காதனவும், கிடைக்க ப்ரஸக்தியில்ல தனவுமான நூல்களைப்பற்றியே பேசுகின்ற இவர் கிடைக்கின்ற சததூஷணீ தத் முக்தாகலாபாதிகளைப் பற்றிப் பேசுவதில் வியப்புத்தானுண்டோ? அமுதனருக்கு தேசிகருக்கும் ராமாநுஜர் விஷயத்தில் ஒரு வாசி காட்டுகிறார். இதை என்போ வாரும் தெரிந்துகொள்ளும்படியாக இருவருடைய நூல்களிலிருந்தும் இரண்டொ

வார்த்தைகளையாவது எடுத்துக்காட்டியிருந்தால் சுவையாய் இருக்கும். சத்ருக்னழ்வான் பெருமாளிடத்தில் வைத்த பக்தியும், மதுரகவிகள் எம்பெருமானிடத்திலே வைத்த பக்தியும் போலே தேசிகரும் எம்பெருமானிடத்திலே ராமானுஜர் தொழும் தெய்வமென்கிற காரணத்தினல் பக்தி வைத்திருந்தால் இதில் என்ன அதிசயம் கண்டாரோ இவர்? அமுதனர்படியும் இப்படித்தானே.

"ராமானுஜர் கட்டிய மாளிகையில் தேசிகர் இரு விவாஹங்கள் நடத்தி வைத்தார் என்பது அடியோடு அர்த்தமில்லாத வார்த்தை. இதற்கு அடுத்த முன்னே இவர் எழுதியிருப்பதாவது ராமானுஜ ஸித்தாந்தத்துக்கு தேசிகர் பண்ணிய மிகச் சிறந்தபணி திவ்ய தம்பதிகளே தத்வம் ஹிதம் புருஷார்த்த மென்ற கொள்கையை ஸ்தாபித்ததும் ஸம்ஸ்க்ருத வேதாந்தத்தையும் த்ரமிடோபநிஷத்தையும் ஒருங்கச் செய்ததும் என்றும். இதற்கும் எவ்விதமான அர்த்தமும் கிடையாது. வித்வான்கள் ஜரத்கவாதி வாக்யார்த்தம் என்பர்களே, அது இதுதான். முதலில் ஒன்று தெரிவிப்போம். இவர் ஏதோ தேசிகருக்குப் பெருமை தெரிவிப்பதாகவும் அதை நாம் மறுப்பதாகவும் அப்படி மறுப்பதானது த்வேஷத்தினுடையவும் அஸூயையினுடையவும் காரியமென்பதாகவும் இவர் பறைசாற்றுவர். உண்மையில் தேசிகருக்கு எந்த பெருமை சொன்னலும் ஒக்கும் ஒக்கும், ஏற்கும் ஏற்கும் என்னவேண்டுமேயொழிய அதை மறுப்பவர்கள் ஸ்ரீவைஷ்ணவர்களாகார். அர்த்தமில்லாதபடி தப்பும் தவறுமாக எழுதி வைத்தால் அதை மறுப்பது த்வேஷ கார்யமன்று, அஸூயாகார்யமன்று; லோகக்ஷேமத்திற்காகவாகும்.

"திவ்ய தம்பதிகளே தத்வம் ஹிதம் புருஷார்த்தம் என்ற கொள்கையை தேசிகர் ஸ்தாபித்தார்" என்றல் இதற்கு என்ன அர்த்தமையா! என்று சில விவேகிகள் இவரை நேரில் கேட்கலாகாதா? ஆளவந்தார் சதுச் ச்லோகியிலும், கூரத்தாழ்வான் ஸ்ரீஸ்தவத்திலும், பட்டர் ஸ்ரீகுணரத்ன கோசத்திலும் பொறித்து வைக்காத அர்த்தம் ஏதேனும் அபூர்வமாகவுண்டோ? உண்டென்னில் அது விபரீதமேயொழிய வேறல்ல. இல்லையெனில் வாய்மூடி நிற்பது. "அப்ரமேயம் ஹி தத் தேஜோ யஸ்ய ஸா ஜநகாத்மஜா" என்று மாரீசன் சொல்லிவைத்தானே. அதை விட அதிசயமாகச் சொல்லவல்லாருண்டோ? உடையவர் மாளிகை கட்டுவதற்கு முன்னமே திவ்ய தம்பதிகளின் விவாஹத்தை அந்த மாரீசனன்றே அரண்யத்தில் மத்தளங்கொட்ட வரிசங்கம் நின்றூத முத்துடைத்தாமம் நிரைதாழ்ந்த பந்தற்கீழ் நடத்திவைத்தான். அதன் பிறகு ஆசார்யவர்க்கத்தில் பிள்ளான் நஞ்சீயர் பெரியவாச்சான் பிள்ளை தெள்ளார் வடக்குத் திருவீதிப் பிள்ளைகள் சீரும் சிறப்பும் பொலிய அந்த விவாஹத்தை நடத்திவைத்து உலகத்தை அந்த திவ்ய தம்பதிகளின் திருவடி நிழலிலே வாழ்வித்தருளி வருகிறார்கள். வேறுயாரோ நடத்தி வைத்ததாக இவர் சொல்லுகிற விவாஹம் எத்தகைத்தென்றல், தென்னுட்டில் சில ஊர்களில் உத்தராயணத் தொடக்கத்தில் மனைதோறும் பெண்டிர்கள் குழாங்கூடி "காக்காப்பிடிவெச்சேன் கன்னிப்பிடிவெச்சேன்—காக்கைக்கும் குருவிக்கும் கல்யாணம்" என்று சொல்லி விவாஹமொன்று நடத்துவதுண்டு; அதுபோன்றதே. ஆனல் அது உடையவர் கட்டின மாளிகையில் நடக்க ப்ரஸக்தியே கிடையாது.

இனி இரண்டாவது விவாஹத்தின் விமர்சனம்—"ஸம்ஸ்க்ருத வேதாந்தத்தையும் த்ரமிடோபநிஷத்தையும் ஒருங்கச் செய்தது" என்றும், "ஸம்ஸ்க்ருத வேதங்களையும் தமிழ் வேதங்களையும் நாடறிய ஒன்றுபடுத்தினர்" என்றும் எழுதியிருப்பவை 'ஸ்வயமபிலிகிதம் ஸ்வயம் நஜாநாதி'யில் சேர்ந்தவையாம். உபயவேதங்களுக்கும் விவாஹம் செய்வதென்றல் என்ன? என்று கேட்டால் ஒன்று சொல்லியாக வேண்டும். "செய்ய தமிழ் மாலைகள் நாம் தெளிய வோதித் தெளியாத மறைநிலங்கள் தெளிகின்றேமே" என்று சொன்னவராகச் சொல்லப்படுகையாலே

4

வடமொழி வேதாந்தத்தில் கலக்கமாகக் காணும் பொருள்களைத் தென்மொ
வேதாந்தமான திவ்யப்ரபந்தங்களினுல் தெளியவைப்பதுதான் மேலே குறித்
விவாஹமென்று இவர் சொல்லவேணும். இங்கு உண்மையென்னவென்ருல் செய்
தமிழ் மாலைகள் நாமித்யாதி பாசுரம் ப்ரதிஜ்ஞா மாத்ரமேயொழிய ஓரிடத்திலு
அணுவளவும் நிரூபணம் கிடையாது. உண்டாகில் தாராளமாக எடுத்துக்காட்டலா

அமலனுதிபிரானைப் பற்றிச் சொல்லும்போது "பாண்பெருமாள் பாடியதே
பாடல் பத்தும் பழமறையின் பொருளென்று பரவுமின்கள்" என்று வடமொ
வேதாந்தமே அமலனுதிபிரானுக வடிவெடுத்திருக்கிறதென்ருர். நாலாயிரத்தினு
அமலனுதிபிரானென்றுக்கு மட்டுமே இவ்வாசிரியர் வியாக்கியானம் செய்தரு
யுள்ளார். பழமறையின் பொருளென்று பரவுமின்களென்றவர் பழமறையினின்
ஒரு பொருளையாவது எடுத்துக்காட்டியிருக்க வேண்டாமா? ஏற்கெனவே அவதரி
துள்ள வியாக்கியானங்களில் இல்லாத பொருள் ஒன்று உண்டா? கோபதாபங்க
விட்டொழித்து நாலைந்து பொருள்களையாவது எடுத்துக்காட்டி மகிழ்விக்க முடியும
அதற்கிவர் பிறக்கவில்லையே. சில அசடுகளைச் சேர்த்துக்கொண்டு கண்ணநீர் பெரு
கப் பிறந்தாரத்தனை. அருளிச்செயற்கடலிலிருந்து அமுதவெள்ளமான எத்தனையர்த்
விசேஷங்களை ஆருயிரப்படியிலும் இருபத்து நாலாயிரப்படியிலும் முப்பத்தாருயி
படியிலும் கொள்ளை கொள்ளையாக அநுபவிக்கிறேம்! அப்படி ஓரர்த்தமாவது காட்டி
றுண்டோ? ஸச்சரித்ரரக்ஷையில் 'கரியமேனிமிசை வெளியநீறு சிறிதேயிடும்
என்கிற திருவாய்மொழிப் பாசுரத்தை யெடுத்துப் பொருள் சொல்ல நேர்ந்த
ஆருயிரப்படியைத் தள்ளி நம்பிள்ளை திருவடிகளின் வியாக்கியானத்தில் கண்
பொருளையே விவரித்து "இப்படி ஆசாரியர்கள் அருளிச்செய்கிருர்கள்" என்,
முடிக்கப்பட்டிருக்கிறது. இப்படி பத்தெட்டு விவாஹங்களை நடத்தியிருக்கிருரென்ப
வாஸ்தவம். இந்த விவாஹங்கள் நம்பிள்ளை கட்டின மாளிகையிலன்றே நடத்தியவ

"உபய வேதாந்த ஸித்தாந்தத்தை தேசிகர் தாம் ஆரம்பித்து வைத்தத
கர்வப்படவில்லை" என்கிற வார்த்தையும் அர்த்தமற்றது. உண்மையில் அ
ஆரம்பித்து வைத்ததாயிருந்தாலன்றே கர்வப்பட ப்ரஸக்தியுள்ளது. கர்வப்
டாலும் குற்றமில்லை. திருவாய்மொழியில் * குரவையாச்சியரோடு பதிகத்தில் பின்ன
களெல்லாம் கர்வமே வடிவெடுத்தவை. அமுதனுர் போல்வார் "எனக்கா
நிகரில்லையே" என்பது முதலான பாசுரங்களால் கர்வம் காட்டியிருப்பதில் கு
கூறுவாருண்டோ?" உபய வேதாந்த ஸித்தாந்தத்தை ஆரம்பித்து வை
தென்ருல் என்ன ஐயா! இவர் உபயவேதாந்தஸித்தாந்தமென்பதற்கும் ஒரு அர்த்
கிடையாதே. இதைப்பற்றின மருமங்கள் குருகுலக்லிஷ்டர்களுக்குத் தெரியு
யொழிய "லவண வணிஜ:" இத்யாதி யதிராஜஸப்ததிஸூக்தி லக்ஷ்யபூதர்
இத்தகைய விஷயங்களில் எழுதப்புகுவது விரலுக்குத் தகாத வீக்கம் என்னத்
மத்தனை. இன்ன பெருமைக்கு இன்னாரிலக்கு என்பதறியாதே அர்த்தமில்லாத
காடுபாய்ந்தெழுதப்புகுவது அபஹாஸ்யமென்று அறியக்கடவது. அபார வாக்சாது
ஸம்பத்திலும் ஸர்வஜ்ஞரென்னும்படியான வித்வத்திலும் குறைகூறுவார் ஆரே
முளரோ? "மாசூணா வான் கோலத் தமரர்கோன் வழிப்பட்டால் மாசூணாவுன்ப
மலர்ச்சோதி மழுங்காதே" என்ற கணக்கிலே அநதிகாரிகள் வாய் வைப்பதும்
வைப்பதும் தகாது தகாது தகாது. அத்வைதிகள் பகவத் ராமாநுஜரைப் புக
தோடும், த்வைதிகள் சங்கராசாரியரைப் புகழ்வதோடு மொக்கும் இவர் செய்
புகழ்ச்சியெல்லாம் என்பது சிலாசாஸனமாய் நிற்கும். தேசிகரைப்பற்றிப் பே
தேசிகரே அதிகாரி." ஆக இவ்வளவும் ஸ்ரீவில்லிபுத்தூர் ஸ்வாமியின் விடையளி

ஸ்ரீவைஷ்ணவ ஸமாராதனம் முற்றிற்று.

ஸ்ரீ:

# ஆசார்ய சம்புவின் மதிப்புரை (P.B.A.)

(நாம் வடமொழியில் எழுதின ஆசார்யசம்பூ அபிநந்தனமென்னும் க்ரந்தத்தின் ஸாராம்சஸங்க்ரஹம்.)

வேதாந்தா சார்ய விஜயமென்னும் மறுபெயரையுடைய ஆசார்ய சம்புவின் பெயரைப் பெரும்பாலும் வயது முதிர்ந்த பெரியார்களே அறிவர். அறுபதாண்டுகட்கு முன்பு சிற்சில விடங்களில் ப்ரவசந பரம்பரையில் இருந்து வந்த இந்த மஹாக்ரந்தம் இந்த நூற்றாண்டில் அறவே பிரசாரமற்றதாக ஆய்விட்டது. நம்முடைய பல நூல்களில் இந்த சம்புவைப் பற்றி பிரஸ்தாவம் செய்திருப்பதனால் இக்காலத்தவர்களுக்கு இதன் பெயர் மட்டுமே தெரிந்திருக்கும். மிகச்சிறந்த பாண்டித்யமும் கவித்வ சாதுர்யமும் பொருந்தியவரும் வேதாந்தாசார்யரென்றே பெயருடையவருமான ஒரு மஹான் 200, 250 ஆண்டுகட்கு முன்னமிருந்தவர் இந்த சம்பூக்ரந்தத்தையியற்றி ஸ்ரீமந் நிகமாந்த மஹாகுருவின் பவித்திரமான சரித்திரத்தை அக்காலத்தில் தம் செவியில் விழுந்தபடியே பொறித்து வைத்தாரிதில். இளமையில் நாம் திருத்தகப்பனாரிடம் இந்நூலைப் பாடம் வாசித்திருந்ததனால் அப்போதே இது உத்தமமான காவ்யமென்றும் பெரும்பாலும் பிராமாணிகமான சரித்திர நூலென்றும் மனதில் உறுதிகொண்டிருந்தோம். இப்போதும் அந்த உறுதிக்கு லோபமில்லை.

ஸ்ரீ நிகமாந்த குருவின் சரித்திரத்தில் பல புதிய கதைகளைப் புகுத்தி ப்ரசாரம் செய்யும் இக்காலத்தவர்களுக்கு இந்த சம்பூக்ரந்தம் காலகூடம் போலிருப்பதனால் இக்காரணங்கொண்டே பலர் இந்நூல் லோபமடைந்து போகவேணுமென்று ஆசம்ஸித்துக்கொண்டிருந்தார்கள். 60, 70 ஆண்டுகட்கு முன்பு தெலுங்கு லிபியில் மட்டும் அச்சேறப் பெற்றிருந்த இந்த உத்தமமான நூல் இக்காலத்தவர்களின் வெறுப்புக்கும் அநாதரத்திற்குமே ஆஸ்பதமாயிருந்தபடியால் மறுபதிப்பு ஏறப்பெறாமல் லுப்தப்ராயமாகவேயிருந்தது. இந்த நிலையில் நமது நண்பர் ஸ்ரீமான் S. அனந்தாசாரியர் [புது டில்லியில் உயர்ந்த உத்யோக பதவியில் வாழ்பவர்] வெகு சிரமப்பட்டு இந்நூலை மிகவழகிய தேவநாகரலிபியில் அச்சேற்றி ஸமீப காலத்தில் பிரசுரப்படுத்தினர். ஏறக்குறைய பத்து வருஷங்களுக்கு முன்னமே இந்நூல் அச்சிடத் தொடங்கப்பட்டதாகவும் இடையிடையே பல இடையூறுகள் நேர்ந்ததாகவும் நமது நண்பர் S. A. நம்மிடம் கூறியுள்ளார்.

ஆங்கிலத்தில் இரண்டு மூன்று முகவுரைகளும் வடமொழியில் ஒரு முகவுரையும் ஆக மூன்று நான்கு முகவுரைகள் இதில் சேர்க்கப்பட்டிருக்கின்றன. இந்நூலியற்றியவர் எக்காலத்தில் எங்கு ஜனித்தவர்? எந்தநூலை ஆதாரமாகக் கொண்டு இதை இயற்றினர். என்னும் விஷயங்களை விமர்சிப்பதன்றோ முகவுரைக்கு அவசியமானது. இந்த விமர்சத்தில் ஒரு முகவுரைகாரரும் இறங்கவில்லை. ஆறு ஸ்தபகங்கள் கொண்ட இந்நூலில் ஒவ்வொரு ஸ்தபகத்திலுமுள்ள சரித்திரப் பகுதிகளை நாம் நமது நாலைந்து நூல்களில் ஸாரமாக வெடுத்து வெளியிட்டிருக்கிறோமாதலால் அவற்றை ஆங்கிலத்தில் விஸ்தரித்தும் வடமொழியில் அதேவிதமாகவும் வெளியிட்டிருக்கிறார் நண்பர். நகரவர்ணனை, வம்சாவளீ ப்ரசம்ஸை, உத்ஸவ ப்ரபாவ வர்ணனை ருதுவர்ணனை முதலான உத்தம காவ்யோசித ஸந்நிவேசங்களை நீக்கிச் சரித்திரப் பகுதிகளை மட்டும் சிந்தித்தால் கதாநாயகரான ஆசாரிய ச்ரேஷ்டருடைய ஸர்வ வித்யா பாரங்கதத்வம், ஆசார்யாநுக்ரஹபாத்ரத்வம், நாநா க்ரந்த ரசனை, வித்யாரண்ய விஜயம் வைராக்ய ஸம்பத் ப்ரகாசனம், ஹயக்ரீவோபாஸனை, தென்னாடு வடநாடு யாத்திரை, திருக்குமாரரவதரித்தல், க்ருஷ்ணமிச்ரன் முதலான சில துர்வாதிகளின் செருக்கையடக்க

ஸங்கல்பஸூர்யோதய பாதுகாஸஹஸ்ரங்கள் ஸாதித்தது, ஒரு விஷவைத்யன் செருக்கையடக்கினது. ஆக இவ்வளவே வரலாறுகள் இந்நூலில் கிடைக்கின்றன. அக்காலத்தில் அவரவர்கள் சொல்லிக்கொண்டிருந்த கதைகள் தம் காதில் விழுந்த வற்றை கல்பனையொன்றுமறியாத ப்ராமாணிகரான இக்கவிவரர் அப்படியே நிபந்தித்து வைத்தார்.

இவற்றுள் க்ருஷ்ணமிச்ரன் கதையொன்று மட்டுமே உண்மைக்கு ஒவ்வாதது. அவன் கி.பி. பன்னிரண்டாவது நூற்றாண்டிலிருந்தவன். பதின் மூன்றாவது நூற்றாண்டின் பிற்பகுதியில் அவதரித்துப் பதினான்காவது நூற்றாண்டில் ப்ரக்க்யாதிகள் பெற்ற வேதாந்தவாசிரியர் காலத்தில் அந்த க்ருஷ்ணமிச்ரன் இருந்து வாதிக்க ப்ரஸக்தியே கிடையாதென்பதை நாம் பல அத்தாட்சிகளுடன் பலவாண்டு கட்கு முன்பு வெளியிட்டிருந்தோம்; அதைக்கண்ட (காலஞ்சென்ற) சேட்லூர் நரஸிம்ஹாசாரியர் தம்முடைய தேசிக சரித்திர நூலில் (பக்கம் 137ல்) க்ருஷ்ணமிச்ர நிரஸனம் என்ற மகுடத்தின்கீழ் "தேசிகனுக்கும் க்ருஷ்ணமிச்ரனுக்கும் ஸமாகமம் அஸம்பாவிதமென்று விமர்சகுசலர்கள் நிரூபிப்பதனால் வேறொருவனே வாதியாயிருக்கத்தகும்" என்றெழுதி முடித்திருக்கிறார். அந்த சரித்திர நூலை நமது நண்பரும் (S. A.) இந்த ஆசார்ய சம்புவின் ஆங்கில முகவுரையில் (பக்கம் 33ல்), "Sri Desika and His works (in Tamil) a critical Edition containing the Lectures by Chetlur M. M. Narasimhachariar swami Published by Sri S S. Iyengar Parankusamandiram. Madras-5." என்று எடுத்துக் காட்டியிருக்கின்றார். ஆக, க்ருஷ்ணமிச்ர கதை ஒன்று மட்டும் தவறுதான். இதனால், இதைக் கூறியிருக்கின்ற இச் சம்பூகாரர் அப்ராமாணிகராகார். நவீனர்களைப் போலே துராக்ரஹத்தாலே அஸமஞ்ஜஸ கதைகளை இக்கவி கல்பிப்பவரல்லர். பாபபீருவும் பரமஸாத்விகருமான இவர் தம் காதில் விழுந்ததை ஓலையிலிட்டார் என்னுமித்தனையே.

இந்த சம்புவில் அடியோடு காணப்படாத அனேக கதைகளை நவீனர்கள் கல்பனை செய்து பிரசாரம் செய்து வருகிறார்கள். (1) ஸ்வாமி ஸ்ரீரங்கத்தில் வாழ்ந்த போது ஒருநாள் ஓர் ஆசார்ய புருஷர் திருப்பல்லக்கில் வீதியில் போய்க்கொண்டிருக்க ஸ்வாமி சில சிஷ்யர்களுக்கு ஸ்ரீபாஷ்ய காலக்ஷேபம் ஸாதித்துக் கொண்டிருந்தார். ஆசார்ய புருஷரை கௌரவியாமல் அவமதித்ததற்காக ஒரு பாகவதன் ஓடிவந்து ஸ்வாமியைப் பரபரவென்று இழுத்துக்கொண்டு போய் வீதிப் புழுதியில் தள்ளினனென்று ஒரு கதை. இது மிகவும் அநியாயமாகக் கற்பிக்கப்பட்ட கதை. ஆசார்ய புருஷர் திருப்பல்லக்கில் போன ஸமயத்தில் ஸ்வாமி ஸ்ரீபாஷ்ய காலக்ஷேபம் ஸாதித்துக்கொண்டிருந்தாரென்றால் அது வாசல் திண்ணையில் நடவாது; உள்ளே தான் நடந்திருக்கவேணும். அப்போது வீதியில் பல்லக்கு போவது ஸ்வாமிக்குத் தெரிய வழியில்லை. ஸ்வாமி அவமரியாதை பண்ணினாரென்று வீதியில் போகிறவர்கள் நினைக்கவும் ப்ரஸக்தியில்லை. ஸ்வாமி வாசல் திண்ணையில் வீற்றிருந்து ஸ்ரீகோசம் கடாக்ஷித்துக்கொண்டிருந்தாரென்னில், அப்போது அபரிமித அட்டஹாஸங்களோடு பல்லக்கில் போகிறவர் யாராயிருந்தாலும் எழுந்து மரியாதை செய்யாமலிருப்பது ஸ்வாமியின் ப்ரக்ருதியன்று. விநயமே வடிவெடுத்த ஸ்வாமிக்கு இவ்வபசாரம் எவ்விதத்திலும் ஸம்பவிக்க ப்ரஸக்தியில்லை. ஆகவே இது மிகவும் ஹேயமான கதை.

(2) ஸ்ரீரங்கவாஸிகளான ஸ்ரீவைஷ்ணவர்கள் ஸ்வாமியை வாதத்திற்கு அழைத்தார்களாம். ஸபக்ஷர்களோடு வாதம் செய்வதில் பாகவதாபசாரம் விளையுமென்று அஞ்சின ஸ்வாமி அதற்கு இசையாமற் போகவே தோற்றார் தோற்றாரென்று பறை சாற்றினதோடு நில்லாமல் ஸ்வாமியின் திருமாளிகை வாசலில் பழைய செருப்புகளைத் தோரணமாகக் கட்டி வைத்தார்களாம். ஸ்வாமி வெளியேயெழுந்தருளின போது

அதைக் கண்டு அவற்றை சிரஸாவஹித்து "வயம் து ஹரிதாஸாநாம் பாதரக்ஷாவலம்பகா:" என்று அநுஸந்தித்தருள, அந்த த்ரோஹிகள் அநுதபித்து சிஷ்யராய் விட்டார்கள். என்கிறவிதுவும் மிகவும் ஜுகுப்ஸநீயமான கதை. இப்படியும் ஒரு கதை கல்பிக்கத் தோன்றிற்றேயென்றுதான் வருந்துகிறோம். இதைக் கல்பித்தவர்களுக்கு எவ்வளவு பாபமுண்டோ அதைவிட இரட்டிப்பான பாபமுண்டு அநுவதிப்பவர்களுக்கு. "வயம் து ஹரிதாஸாநாம் பாதரக்ஷாவலம்பகா:" என்று ஸ்வாமி ஸாதித்திருக்கலாம். அதற்கு அவதாரிகையாக இப்படியா ஒரு கதை தொடுப்பது இப்படி கோரமான அபசாரங்கள் புரியும்படியாகவா ஸ்வாமி யெழுந்தருளியிருந்தார்? ஸ்வாமியை வாதத்திற்கு அழைக்கவல்ல பிரபல வித்வான்கள் ஸ்ரீரங்கத்திலிருந்தார்களென்று ஒரு புறம் காட்டுவது. பிறரோடு வாதம் செய்யமாட்டாத அல்பஜ்ஞர்களே அங்கிருந்தார்களென்றும் மற்றொரு புறம் எழுதுவது! தேசிக பக்தியின் ஆவாஹனம் என்னென்ன கூத்துகளைச் செய்கிறதங்தோ! ரஹஸ்யத்ரயஸாரோபக்ரமத்தில் "வந்தே ஹஸ்திகிரீசஸ்ய வீதீ சோதககிங்கரான்" என்றொரு சுலோகம் ஸாதித்துள்ளார். இதற்குச் சேர ஓர் ஐதிஹ்யம் கட்டவேண்டாவா? தேவப் பெருமாளுடைய திருவீதிகளில் குப்பை வாருகிறவர்களைத் தொழுகிறேன் என்பதல்லவா இதன் பொருள். அந்த குப்பை வாரிகள் தாங்கள் வாரின குப்பைகளைச் சில ஸ்ரீவைஷ்ணவர்களின் துர்ப்போதனையினால் ஸ்வாமியின் திருமுடிமீது கொட்டினர்கள்; அப்போதநுஸந்தித்த திவ்யச்லோகமிது என்று அவதாரிகையிடாமலிருப்பது ஏனோ? ஸ்வாமி ஸ்ரீபெரும்பூதூர்க்கு எழுந்தருளினர்; அப்போது அங்கிருந்த அஸூயாளுக்களான ஸ்ரீவைஷ்ணவர்கள் ஸ்வாமியின் திருமுடியைத் தங்கள் காலால் துவைத்தார்கள்; அப்போது "யதீச்வரஸரஸ்வதீஸுரபிதாசயாநாம் ஸதாம் வஹாமி சரணாம்புஜம் ப்ரணதிசாலிநா மௌலிநா" என்று இந்த ச்லோகத்தை ஸாதித்து அவர்களை நமஸ்கரித்தார் என்கிற ஐதிஹ்யம் எழுத ஏன் தோன்றவில்லையோ? இப்படி நூற்றுக் கணக்கான ஐதிஹ்யங்கள் எழுதுவதற்குப் பாங்காக ஸ்வாமியின் ஸ்ரீஸூக்திகள் அபரிமிதமாக அவதரித்திருக்கின்றனவே.

(3) நிமந்த்ரண ஸ்வாமிகளைக் கலஹம்செய்து போகவொட்டாமல் தடுத்து ச்ராத்தத்தைக் கெடுக்க முயன்றதாகவும், ஹயக்ரீவர் மூன்று திருமூர்த்திகளாக அவதரித்து மூன்று இலைகளிலும் அமுது செய்து ரக்ஷித்ததாகவும், ச்ராத்தத்தைக் கெடுக்க நினைத்திருந்த பாபிகள் இவ்வதிசயத்தைக் கண்டு அநுதபித்து க்ஷாமணம் பண்ணிக் கொண்டு ஸ்வாமிக்குப் பாதச்சாயையாகவும் பாதரேகையாகவுமிருந்ததாக ஒரு கதை. ச்ராத்தத்தில் நிமந்த்ரணத்திற்காக வரிக்கப்படுமவர்கள் ஆப்தபந்துக்களாயிருப்பர்களே தவிர வழிப்போக்கர்களாயிருக்கமாட்டார்களே. இதிலென்ன ஸம்சயம்? அப்படி ஆப்தபந்துக்களானவர்கள் நிமந்த்ரணத்திற்கு இசைந்திருந்து ஸமயத்தில் வாராதே வஞ்சித்து விட்டார்களென்று கதையெழுதினால் இது மஹாவைபவநிதியான ஸ்ரீஸ்வாமி விஷயத்திலே பொருந்துமாவென்று இதுகூட ஆராய்வாரில்லையே. அஸூயுக்களின் கலஹவார்த்தைக்கிணங்கி ஒருவர் வஞ்சித்துவிட்டாலும் மூவருமே வஞ்சித்துவிட்டார்களென்று கதையெழுதுவது வியப்பினும் வியப்பே. அப்பயதீக்ஷிதருடைய சரித்திரத்தில் காணும் கதை இது. சாஸ்த்ர கர்ஹிதமான பலகாரியங்களைச் செய்து பதிதர்களென்று ஒதுக்கப்பட்டவர்களான சிலர் செய்யும் ச்ராத்தங்களில் இப்படிப்பட்ட ஸம்பவம் விளைவது கேட்டதுண்டு, கண்டதுமுண்டு; பதித பாவநரான ஸ்வாமிதிறத்திலா இப்படி அதிஹேயமான கதையைத் தொடுப்பது? இவர்களது கொள்கையின்படி இக்கதை உண்மையாக நடந்திருக்குமாகில்.. ....மேலே என்ன சொல்லுவதென்று தோன்றவில்லை. தேசிகனுக்குப் பெருமையென்று நவீநர்கள் நவீநமாகக் கல்பனை செய்து எழுதும் விஷயங்கள் இவ்வளவு ஹேயமாயன்றோவிருக்கின்றன. எந்த ஆசார்யர்களின் திவ்யஸூக்திகளை ஸ்வாமி தலையாலே சுமந்து ஸதாஸர்வதா அவற்றையே அநுஸந்தானம் பண்ணிக்கொண்டும் தம்முடைய க்ரந்த

களிலும் தழுவிக்கொண்டும் போந்தாரோ அந்த ஆசார்யர்களை ப்ரதிபக்ஷிகளாகக் கொண்டிருந்தாரென்றும், அவர்களுடைய அந்த திவ்ய ஸூக்திகளைக் கண்டிப்பதே காரியமாக இருந்தாரென்றும் இப்படிப்பட்ட அபத்தங்களையே நிரப்பியன்றோ நவீநர்கள் தேசிகவைபவமென்றும் தேசிக ப்ரபாவமென்றும் தேசிக திவ்ய சரித்ர மென்றும் எழுதி வைப்பது. இந்த அபத்தங்களையெல்லாம் வெகு தூரத்தில் விலக்கி ப்ராமாணிக ஹ்ருதயங்கமமான சரித்திரங்களையுணர விரும்புபவர்களுக்கு ஆசார்ய சம்புவே தஞ்சம். வேறு எந்த நூலும் கிடையாதென்று குடப்பாம்பில் கையிடுவோம்.

பக்தி விசேஷத்தினால் ஆசார்யருக்கு அங்யாத்ருசமான வைபவங்களைப் பிரசுரஞ்செய்ய வேணுமென்று குதூஹலங்கொண்டு சில பல கதைகளைக் கற்பனை செய்து சிலர் எழுதி வைத்திட்டால் அதையநுஸரித்துப் பின்புள்ளவர்கள் எழுதி வந்தால் நாளடைவில் அந்த கல்பித கதைகள் மெய்யென்று நினைக்க நேர்ந்து விடுகிறது. அந்த கல்பித கதைகளில் அநுபபத்தி ஒன்றுமில்லையாகில் பக்திமான்கள் உகந்தேயிருக்கலாம். இதர ஆசார்யர்களுக்குப் பழிப்பாய் ப்ரக்ருத ஆசார்யருக்கும் பழிப்பாய்த் தலைக்கட்டுகின்ற அக்கல்பனைக் கதைகளால் பரிஹாஸ்யதையே தேறுவதனால் விவேகிகளாயுள்ளவர்கள் கல்பனைக் கதைகளை விலக்கியே தொலைக்க வேண்டும். இன்னின்ன கதைகள் கற்பனையென்று நாம் நெடுநாளாகவே தெரிவித்து வருவதால் பிராமாணிகர்களாயுள்ளவர்கள் இவை அசைக்கமுடியாத விமர்சங்களே யென்று உகந்து ஏற்றுக் கொள்ளுகிறார்கள்.

* ராமோ ராமோ ராம இதி ப்ரஜாநாமபவந் கதா:* என்றாற்போலே "வேதாந்த ஸூரிர் நிகமாந்தஸூரிஸ் த்ரய்யந்தஸூரி: கவிதார்க்கிகேந்த்ர:, இத்யேவ ஸர்வத்ர ஸதைவ ஸர்வே ஜநாஸ் ஸமந்தாத் கதயந்த ஆஸந்" என்று ச்லோகமியற்றிக் குலாவ வேண்டியிருக்க, (அதாவது) உலகமெல்லாம் தம்மையே வாய் வெருவும்படியாகத் தமது திருக்குணங்களாலே எல்லாரையும் ஆவர்ஜநம் செய்துகொண்டு எழுந்தருளியிருந்தாரென்று உள்ளபடி பெருமைகளை ப்ரசாரம் செய்யவேண்டியிருக்க, அது செய்யாதே ஸபக்ஷர்களும் விபக்ஷர்களுமான எல்லார்க்கும் வெறுக்கத்தக்கவராக இருந்து வந்தாரென்று ப்ரசாரம் செய்வதனால் ஸ்வாமிக்கு லாகவமன்றோ உண்டாகிறதென் பதைச் சிறிது மறியகில்லாதே, வைபவ க்ரந்தமென்று பெயரிட்டு லாகவமயமாக எழுதிவைப்பவர்களைப் பற்றி மிகவும் சோகிக்கவேண்டியது தவிர வேறுண்டோ?

தங்களுடைய தேசிக பக்தி அபாரம் என்று காட்டவேண்டியோ, பிறர்க்கும் தேசிக பக்தியை விளைக்க வேண்டியோ சில கதைகளைக் கற்பனை செய்தாலும் குற்றமில்லை. "தேசிகன் நூறு தடவை ஸ்ரீ பாஷ்ய காலக்ஷேபமும் நூற்றெட்டு தடவை ச்ருதப்ரகாசிகா காலக்ஷேபமும் ஆச்சரியமாகவும் ஒவ்வொரு தடவையிலும் அபூர்வார்த்தகனமாகவும் ஸாதித்தருளியாச்சுது" என்று இப்புடைகளிலே யெழுதிவைத்தால் ஆகாதா? "தேசிகன் ஹயக்ரீவனோடுகூட யாத்திரை செய்தருளுகையில் கனவேகமாகக் கோயில் சேர விரும்பிய ஸ்வாமியின் மனோரதத்தைப் பூர்த்தி செய்ய நினைத்த ஹயக்ரீவன் குதிரை வடிவங்கொண்டு ஸ்வாமியைத் தன்மீது எழுந்தருளப் பண்ணிக்கொண்டு ஒரே நொடியில் கோயிலில் கொண்டு சேர்த்ததாக............இப்படி எத்தனையோ கதைகளை யெழுதி வைக்கலாமே. இத்தகைய கதைகளினால் இதராசார்ய நிந்தையொன்றும் ஏற்படாதேயென்கிற வருத்தந்தானேயிவர்களுக்கு.

இந்த சம்பூக்ரந்தப் பதிப்பில் ஆங்கிலத்தில் இரண்டு முகவுரைகளும் ஸம்ஸ்கிருதத்தில் ஒரு முகவுரையும் சேர்க்கப்பட்டிருப்பதாகக் கீழே தெரிவித்தோம். ஸம்ஸ்க்ருத முகவுரைகாரர்க்கு இந்த சம்புவைப் பார்த்த பிறகு மநோவ்யாகுலதை மிகவுமுண்டாயிற்று. "இக்காலத்தவர்கள் தேசிகன் சரித்திரமாகவும் வைபவமாகவும் சொல்லி வருகிற வரலாறுகளில் ஒன்றுகூட இந்த சம்புவில் காணப்படவில்லையே.

